உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தக்ஷிண கைலாச புராணம்.

இஃது

யாழ்ப்பாணத்து நல்லூர்

மஹாவித்துவான்

சிங்கைச்செகராசசேகரன்

இயற்றியது.

---

யாழ்ப்பாணம் காங்கேசன்துறை...கர்

இயற்றமிழ்ப்போதகாசிரியர்

ம. கார்த்திகேயையரவர்களால்

பல பிரதிகளைக்கொண்டு பரிசோதிக்கப்பட்டு

அவருடைய புத்திரராகிய

ஸ்ரீ சிவசிதம்பரஐயரால்

...கலாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

Madras:

PRINTED AT KALARATNAKARAM



1887.

...லக்ஷ்ம...ன்க. ஆதல்பற...வர்களை வேண்டு...

---

இதன் விலை அணா - கஉ

இதன் அடியிற்குறித்த புத்தகங்கள் சென்ன பட்டணத்தில் கலாரத்நாகர அச்சுக்கூடத்தில் ஊ-புஷ்பரத செட்டியா ரவர்களிடத்திலும், யாழ்ப்பாணத்திற் சுன்னாகம் அ. குமாரசுவாமிப்பிள்ளை யவர்களிடத்திலும். வண்ணார்பண்ணை வித்தியாநுபாலன யந்திரசாலை த. கைலாசபிள்ளை யவர்களிடத்திலும், பருத்தித்துறை கா. நாகநாதஐயரவர்களிடத்திலும், திரிகோணமலை-தமிழுபாத்தியாயர் சி. சுப்பிரமணியபிள்ளை யவர்களிடத்திலும், கொழும்பு முகத்துவாரம் எல். எம். ஓ. மரைக்கா ரவர்களிடத்திலும் வாங்கிக்கொள்ளலாம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| விதானமாலை மூலமும் உரையும். | க | 0 |
| தக்ஷிணகைலாசபுராணம். | 0 | உ |
| முனீசுரர் நவமணிமாலை. | 0 | ஒ |
| அடைக்கலப்பத்து. | 0 | வ |
| திக்கையந்தாதி | 0 | க |
| முனீசுரர் விண்ணப்பப்பத்து | 0 | [illegible] |
| முனீசுரர் பலசெய்யுட்கோவை | [illegible] | க |
| திக்கைநாயகர் [illegible]மணிமாலை | [illegible] | க |

இங்ஙனம்,

கா. சி.

# விக்கியாபனம்.

---

தக்ஷிணகைலாசம் என்பது ஈழநாட்டிலே தேவாரம் பெற்ற சிவஸ்தலங்களுள் ஒன்று. இது முன்னே வாயுவினாற் பிடுங்கியெறியப்பட்ட கைலையங்கிரியின் சிகரங்கள் மூன்றனுள் ஒன்று. திரிகூடம், மச்சேசுரம், என்றும் இதற்குப்பெயர். இதனைத் தற்காலத்திலே திரிகோணமலையெனப் பெயரிட்டு வழங்குகிறார்கள்.

இத் தக்ஷிணகைலாசபுராணம் ஏறக்குறைய தொளாயிரம் வருடங்களுக்கு முன்னே மதுரையினின்றும் வந்து யாழ்ப்பாணத்தை அரசுபுரிந்து நல்லூரிலேயிருந்த, சிங்கையாரியச்சக்கிரவர்த்திக்குப் பன்னிரண்டாம் வழித்தோன்றலாகிய செகராசசேகரன் என்னும் அரசனாலே சைவராச பண்டிதன் என்னுங் குருவின் ஆஞ்ஞைப்படி, வடமொழியிலுள்ள மச்சேந்திய புராணத்தினின்று மொழிபெயர்த்து; ஏழு சருக்கங்களை யுடையதாகச் செய்யுள் நடையா லியற்றப்பட்டது.

இப்புராணத்திலே திருநகரச்சருக்கம் ஈற்றிலுள்ளதன்றோ? அதிலுள்ள சரித்திரங்களெல்லாம் முதனூலாகிய மச்சேந்திய புராணத்திலே கூறப்படாதிருப்ப, அதனையுஞ் சேர்த்து அச்சிட்டதென்னை யென்பாராயின், ஆசிரியர் வடநூலிலே கூறிய சரிதமன்றி, பின்னர் நடந்த சரித்தத்தை தாஞ் சேர்த்த தென்றமையானும், நூன் முழுதும் அந்தாதித் தொடையா யிருப்பதா[illegible] அறுநூற்று முப்பத்திரண்டென விருத்தத்தொ[illegible] [illegible]பட்டமையானும், மேற்கூறிய சருக்கத்தைத் [illegible]விலக்கின [illegible]ரியர் கூற்று மாறுபடுமென்பது கருதியென்க. ஆதல்பற்றி நம்மேற் குறை கூறாதிருப்பான் புலவர்களை வேண்டுகின்றேன்.

இப்புராணத்தைப் பலர்க்கும் உபயோகமாம்பொருட்டு அடியேன் பிதாவாகிய, ஸ்ரீல ஸ்ரீ. கார்த்திகேயையரவர்களைக்கொண்டு பெரும்பான்மையும் கண்ட பிரதிகளின் வண்ணமே பரிசோதிப்பித்து அச்சிடுவித்தேன். ஆனால், அர்த்தம் புலப்படாத விடங்களிற் பிரதிகளிற் கண்டவண்ணமே பிரசுரிக்கப்பட்டது. என்னை? ஆசிரியர்கருத்தை யறியாது ஒன்றை விலக்கலும், நூதனமாக வொன்றைச் சேர்த்தலும், ஒன்றை யொன்றாக மாற்றுதலும் அறிவுடையோர்க் கழகன்று ஆதலின்.

இந்நூலை அச்சிடும்படி பற்பல பிரதிகளை வருந்தித் தேடியெடுத் தனுப்பியவரும், திரிகோணமலைவாசருமசிவபத்தி அடியார்பத்திகளிற் சிறந்தவருமாகிய, ம-ள-ள-ஸ்ரீ சி. சுப்பிரமணியபிள்ளை உபாத்தியாயரவர்கட்கு என்றும் நன்றியறிதலுள்ளவனாக விருக்கின்றேன்.

கொழும்பு.
சர்வசித்துஹ
புரட்டாசிமீ உ0வ

இங்ஙனம்,
கா. சி.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

யாழ்ப்பாணத்து நல்லூர் மஹாவித்துவான்

அரசகேசரி

இயற்றியது.

---

ஆசிரியப்பா.

மணிநிறக்கண்டன் மாண்புறுகயிலையி
னணிநிறக்கொடுமுடி யாயிரத்தோர்முடி
படவரவொதுங்கப் பறித்தருமிலங்கை
யடகடனடுவண் மாதிரமதிப்ப
வருமுக்கோண மலைதென்கயிலை
பரனருளுருத்திரர் பதினொருபேரு
மொருபதுமுகுந்தரு மொன்பதுவிரிஞ்சரும்
வருகடற்கடகம் வழங்கியமீனமுந்
திருமலைதழுவிய தெசமுகநிருதனும்
பெருமாதமலைகரிப புரவலர்பலரும்
பூசை[illegible]ாடிறைஞ்சிய புராணநூற்கதையை
ஆசறுதமிழி லறைகுதியென்றனை
னருமறையுபநிட [illegible]டம்
விரிகலைபலவும் விளங்கியபுரவன்
சேயினுந்திறலான் சிவநெறித்தவனுளான்
ருயினுமினியான் றயாநிதியனையான்
முட்புரிநூர்பயன் மூரியதாமன்
செப்பருஞ்சைவ ராசபண்டிதன்
அர்த்தாதித்தொடை யடியொடுதொடுத்து
நந்தாவிருத்த நவையறக்கூறின
னன்னுடைடைந்த நாரியர்கோமான்
பொன்னுடைடைந்த பொருவருகாதலன்

# சிறப்புப்பாயிரம்.

மருவலர்தங்களை வானிலத்திருத்திப்
பொருவருபுவியை யொருகுடைய ப[illegible]ான்
றென்னிலங்காபுரி திசைதொறுமருவு
மின்னிலங்கியவேல் மேலாம்புயத்து
பரவாமுடித்த பார்முழுதாண்ட
விடலாண்வயமா விளங்கியகொடியாள்
சிங்காசாரியன் சேதுகாவலன்
கங்கைநாடன் கற்றவர்திலகன்
ஆயுணமறையுட னரியசோதிடம்
பாய்திரைக்கடலுட் பலவுமுணர்ந்தோன்
ஒப்பிலாமுத்தமி ழோர்ந்த
செப்பருஞ்செக ராசசேகரனே.

---

தேவரும்புகழ்செகராசசேகரக்
காவலன்கருணையிற்கடவுண்மாநதி
மாவுறைதென்கயிலாயமான்மியம்
பாவியறமிழினும்பகர்ந்திட்டானரோ.

---

சிவமயம்.

# சிறப்புக்கவி.

யாழ்ப்பாணத்து நல்லூரைச்சார்ந்த கொக்குவில்

சரவணபவதாசர்

ம-௱-௱-ஸ்ரீ

ந. சச்சிதானந்த நமசிவாய அவர்கள்

இயற்றியது.

---

திருவைநேர்ந்திடுவேட்டுவர்சிறுமியர்சேண்மீ
திருகைநீட்டியேயிளம்புலிக்கன்றினையழைக்கும்
பொருவில்பல்கிரியுடுத்துயர்பொழில்பலநிறைந்த
பெருமைகொண்டொளிரீழத்திற்பிறங்குவமன்றே. (க)

நதிமுடித்தசெஞ்சடையனைநான்மறைப்பொருளைத்
துதிகொள்செந்தமிழ்முதிஞற்றொல்லைநாண்மூவர்
பதிகமோதியேபோற்றுசீரத்தலம்பலவுள்ளு
மதிகமேன்மைபெற்றுயர்ந்ததுகோணமாவசலம். (உ)

பன்னரும்பரையங்கமாய்ப்பகலினையேய்க்கு
நன்னரிக்குழூச்சிகரியாய்நண்ணியகயிலை
தன்னிலே[illegible]ர்முடிமருத்துவன்சமரி[illegible]முரித்துக்
கொன்னியீழத்தினிறுத்[illegible]ணமாவசலம். (௩)

பங்கயச்செழும்பள்ளிகொ[illegible]பாரதிகொழுநன்
செங்கண்மான்முதலமரர்கடினந்தினங்குழூம்த்
கங்கைவேணிபங்கணனுதற்கடவுளைக்குறித்துக்
கொங்கரும்பியமலர்கொடேபணிவதுகோ[illegible]ணம[illegible]சலம். (௪)

ஐந்தருப்பெருநிழலிடையிருந்தரசியற்று
மிந்திரன்முதலமரர்களிடரடைந்தயரக்
கந்தரட்புயராவணனெடுத்துழிக்கலங்கா
முந்துநின்றதுமுன்னுசீர்க்கோணமாவசலம். (௫)

இந்தமேன்மைபெற்றுயர்மலைச்சரிதங்கூறினிய
முந்துசெந்தமிழ்ப்பாவினுன்மொழியெனப்பணித்தான்
கந்தநாண்மலர்க்கமலமீதுறைந்தவற்கடுப்ப
வந்துதோன்றினோன்வாதராயணனெனுமுனிவன். (௬)

மேலைஞான்றினின்வகுத்தமூவாறெனும்புராண
நாலுவேதமார்மிருதிகள்யாவதுநம்பன்
காலவாதியிலருள்புரியாகமங்கற்றுச்
சீலமேவுசைவராசப்பெயர்கொள்பண்டிதனே. (௭)

வருளும்வாசகமதுதுணையாகவேகொண்டு
பரவுத[illegible]ியநவரசந்துலங்கவேபாரில்
விரவுநாவலர்விருந்தெனவேண்டியுட்கொள்ள
வுரவுதக்கிணகயிலைமான்மியமெனவுரைத்தான். (௮)

வேறு.

எண்ணெழுத்தென்னுநூற்கரைகண்டோனிருநிலன்புரந்திடுசீர்த்தி
நண்ணியவரசாமணிமுடியுழுதுநள்ளொளிகாலுசெந்தாளான்
கண்ணகன்சேதுவுயர்கரைக்காவல்பூண்டவன்கறைகெழுவேலான்
திண்ணியசிங்கையாரியன்சீர்த்திசெறிசெகராசசேகரனே. (௯)

பொன்னிணருழ்க்கும் பொலஞ்சினைத்தருக்க ணிறைந்திடு பொருவில்யாழ்ப்பாண, மென்னுநன்மங்கை கண்ணெனவிளங்கி யெறிதிரைப் பரவைசூழ்காரை, நன்னகர்வாச ஞன்மறையாளனுற் கவிபொழிந் திடுமேக, மன்னவன்கார்த்தி கேயனுமறிஞ னரிறபவாய்ந்துபன் முறையே. (௧0)

ஈந்திடவெழுதா வெழுத்திடையிட்டா னவன்முன மியற்றியதவத்தாற், போந்தவனென்ற னுயிர்த்துணைநண்பன் புலவர்கடியொலாநீங்க, வேந்திடுவேற்கை யிறைடவன்பாத மிறைஞ்சிடுமருநெறிச் தவத்தான், றீந்தமிழறிஞன் சிவசிதம[illegible]ரப்பேர் திசைசிறீயுறுமுரவோனே. (௧௧)



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தக்ஷிணகைலாசபுராணம்.

## பாயிரம்.

### காப்பு.

உதயமால்வரையொண்கதிரன்னவெண்
ணிதயதாமரைமீதிலிலங்குவ
மதகடாமழைவாரணமாமுக
முதல்வனைங்கரமூர்த்திபதாம்புயம்.

### கோணீசர்.

சீர்கொண்டகருமுகிலுஞ்சதுர்வேதச்செம்முகிலுஞ்சிறந்துபேண
நீர்கொண்டசெஞ்சடையினிமிராவுங்கூனிலவுநிரந்துசூழத் [ற்று
தார்கொண்டதிருமார்பில்வெண்ணூலும்பசுங்கொடியுந்தயங்கத் தோ
மேர்கொண்டகயிலைமலையொருமுதல்வனிருசரணமிறைஞ்சிவாழ்வாம்

### இதுவுமது.

வாயந்தநிலைமலரடியுமலரடிமேலேறிட்டுவைத்ததாளுங்
காந்துமணிச்சிலம்பொலியுமொருபாகம்புகவிடுத்தகையுமார்பும்
பாந்தளெலாம்விரித்தாடவிரித்தசடைப்பரப்புமொருபாகமாது
மேந்தியொருகயிலைமலைநிற்குமிறைதன்னைமனத்திருத்தல்செய்வாம்.

### இதுவுமது.

செய்யமணித்தாளழகுந்தாண்மீதிற்சிலம்பழகுஞ்சிறுமானேந்து
கையழகுமழுவழகுந்திருமார்பினூலழகுங்கருணைப்பார்வைத்
துய்யமுகமலரழகும்புன்முறுவனகையழகுந்துலங்கித்தோன்று
மையனுயர்கயிலைமலைமுதல்வனையெம்மிதயமலரழுத்துகிற்பாம். (௧)

மாதுமையம்மை.

பார்புரந்ததிருவடியுமடியவர்களீடேறும்படிக்குப்பைம்பொற்
றூர்புரந்தவடிவழகுமழகெழுமங்கலநாணுந்தயங்குஞ்சோதிக் [கு
கார்புரந்தகருங்குழலும்வெண்ணகையுஞ்செவ்விதழுங்கருணைக்கண்ணு
சீர்புரந்தபிடியன்னமென்னடையம்பிகைபாதஞ்சிந்தைசெய்வாம். ()

விநாயகர்.

செம்முளரியுங்கதையுஞ்சக்கரமும்வெண்கோடுஞ்சிலையும்பாம்பும்
விம்முமணிப்பொற்குடமுங்கழுநீருமுத்தலையும்விளங்குஞ்செந்நி
..ஙமுமாதுளமுந்தரித்தொருபால்வல்லவையுந்தரித்தசோதிக்
கைம்மு..னபுறவாதென்னிதயமுமெனபுந்தியுமென்கருத்துந்தானே.

சுப்பிரமணியர்.

தானவர்க ளூரங்கெடுத்து வானவர்கள் புரங்கொடுத்த தலை வன் வேத, ஞானவரம் பெதுகொலென வரன்கேட்ப வுரைத்தபர ஞான போதன், கானவரம் புனத்திலொரு குறமகள்பின் னுறநடந் கமல பாதன், றேனமருந் தொடைமுருக னொருவேல னிருதாளெ.. சிந்தை சேர்ப்பாம். (சு)

சிவனடியர்.

சிந்தனையு மருச்சனையுந் தமிழ்ப்பாட லாமெனமுன் செய்தநா ல்வ, ரந்தண்மலர்க் கழல்போற்றி தண்டீச ரடிபோற்றி யமலன் கோயி, னிந்தனையற் றிடவணங்கு மடியவர்சே வடிபோற்றி நிமலன் பொற்றாள், வந்தனைசெய் யெவரோனு மவர்சரணஞ் சிரத்தினுமென் மனத்து முய்ப்பாம். (எ)

குளக்கோட்டன்.

பார்தாங்குகோவிலும்பொன்மண்டபமுங்கோபுரமும்பார்க்குணட்டி
யோர்தாங்குமாயனுக்குமலங்காரவாலயமொன்றியற்றிமுற்றுங்
கார்தாங்குதிருக்குளமும்பாவநாசனச்சுனையுங்கண்டகண்டன்
சீர்தாங்குகுளக்கோட்டனெனுஞ்சோழகங்கனைநஞ்சிந்தைவைப்பாம்.

வைப்பானவடகயிலைதென்கயிலையென்றிரண்டுவகைக்குமுன்னுட்
செப்பாதிவடமொழியின்புராணநடைதென்மொழியாற்செப்புகென்
னிப்பாரிலயனுன்குமுகமுமொருமுகமாகியிசைந்ததென்ன [மு
மெய்ப்ப..னகுருச்சைவராசபண்டிதனெனுநால்வேதநூலோன். (க)

வேதமுதலுபநிடமுஞ்சிவாகமமும்புராணமுதல்விரிநூல்யாவுஞ்
சோதிடமுமந்திரமுமுணர்ந்துணரார்தவர்தெளியச்சொல்லவல்லோ
னுதலினுலக்குருவின்மொழிகேட்பவேண்டுமெனுமன்பினாலே
யோதினனிவ்வடமொழியின்புராணநடைதென்மொழியினுலகமீதே.

மீதுபார்ந்தவுருத்திரரும்விரிபதுமப்பெருமலரின்விரிஞ்சர்தாமும்
போதத்திருமாதவருமாதவர்க்குளொருபெரியபுனிதமீனு
மோதுமினிறைஞ்சுகதைகயிலாசபுராணமெனவறையலுற்றேன்
மாதுரியமச்சேர்ந்தியமாம்வடபுராணத்தின்வண்ணமாதோ. (௧௧)

---

## அவையடக்கம்.

அத்திறத்திற்கயிலாசபுராணமெனத்தமியேனோர்ந்தறைந்தநூலி
னெத்திறத்தும்வழுவேழுமீரைந்துகுற்றமும்வந்தியன்றதேனு
முத்தமிழ்வல்லோர்சிறிதுமிகழவரோசிறியோர்தம்முழந்தாளூன்றி
நித்தியெனநடந்தாலும்வெறுப்பரோநாடகியர்நீதிதென்ன. (௧௨)

என்னவடி யென்னதொடை யென்னகவி யென்னபொரு ளிது
கொலென்னூர்க், கன்னபுரா ணத்தினுண்மை யாராய்வி னுற்பெரிது
மறிய லாமா, லுன்னருமக் கதைப்பொருட்டென் புன்கவியும் பெரி
யோருட் கொள்வ தல்லாற், கன்னலேயச் சுவைக்கலது கோதிற்கோ
ராய்சிவப்பக் கறித்துண் பாரோ. (௧௩)

## ஆக்கியோன்பெயர்.

பாரிலங்குகயிலாசபுராணத்திற்கேழ்சருக்கம்பயில்வித்தோங்கு
மர்ரமுதவிருத்தகவியறுநூற்றுமுப்பத்திரளவேயாக்கிச் [திப்
சீரொழுத்துச்சொற்பொருள்யாப்பலங்காரமுதலியநூறெறிக்குஞ்சீர்த்
பேரிலங்குசிங்கையந்தார்ச்செகராசசேகரனும்பெருமன்மாதோ. ()

தோன்றுமுயி ரனைத்துமாய்த் தோன்றரிய மெய்ஞ்ஞானச் சுட
ருமாகிக், கான்றகதிர் நிலவொழுகு மதியரவுந் திருமுடிமேற் காட்டி
நிற்கு, மூன்றுலகுக் கப்பாலு முதல்வனிது நமக்கிடமா முறைமைத்
தென்ன, வேன்றமலைக் கொழுந்துவள ரிலங்கைவள மதுசிறிதிங் கிய
ம்பு கிற்பாம். (௧௫)

பாயிரம் முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-௧௫.

---

## முதலாவது
## ஈழமண்டலச்சருக்கம்.

பாருநாகமும்பைங்கிரியுந்திரை
நீருநேர்புடைசூழநிமிர்ந்தெழு
மேருமீதில்விளங்கியசென்னியொன்
றூரமாருதங்கொண்டிங்கமைத்ததே. (க)

அமைத்தபொன்மலையாதலினப்பெயர்
சமைத்தவீழமிதென்றுதழீஇயதா
லிமைத்தமாமணியெங்குமிலங்கலா
லுமைத்தநாவயலூருமிலங்கையே. (உ)

இலங்குமாமணியாதலினுவலாற்
றுலங்குமாதவர்சூழவருதலாற்
பலங்கொடாபரமெங்கும்பரித்தலாற்
பொலங்கொளீழமும்பொன்மலைபோலுமே. (ங)

மேருவுந்தென்னிலங்கையும்வேறலென்
றூருஞ்சொல்வரதற்குமிதற்குள
சீருமுத்தமிழ்ச்செல்வமுமெம்பிரா
னூருநன்கயிலாயமுமுள்ளதே. (ச)

உள்ளமும்புறமுமுயிர்க்கொள்கையின்
வெள்ளமும்புனல்வெள்ளமும்மிக்கெழீஇ
யுள்ளல்வாரியடங்கலுமுண்டுகார்
துள்ளுதாரைபணித்தல்சொரிந்ததே. (ரு)

தேனிறைத்துயரம்பரைசெங்கதிர்
வானிறைத்துவருவதுபோலநன்
கானிறைத்துநிவந்தெழுகன்மலை
மேனிறைத்துவிரைந்ததுநீத்தமே. (சு)

மேவுகாரகிலும்விரைச்சாந்தமும்
பூவுநாவியும்பொன்னுந்தரளமு
நீவிநன்கடைதோறுநிறைத்தலா
லோவிலாப்புனல்வாணிகரொக்குமால். (எ)

மால்வரைக்களிறுந்திரைவாசியு
மேல்வளைத்தநுரைக்குடைவீக்கமுஞ்
சேலினத்திரள்வாளுஞ்சிறத்தலா
லேலுமப்புனன்மன்னவனொன்னலாம். (அ)

ஆங்கரும்புமலருங்கதலியு
மாங்கனிக்குலமுஞ்செவ்வருக்கையுந்
தேங்குதேனுந்திரைத்தபுனல்சிவ
னோங்குபூசனைக்குய்ப்பவரொக்குமே. (௯)

நீக்கவெங்குமுலாயபெரும்புனல்
புக்குநாணிலமும்புடைத்தார்த்தெழீஇ
மிக்கசெய்தொறுந்தேக்கிவிரைந்துபோய்த்
தக்கவாரிதழீஇயப்பரந்ததே. (௧0)

பரந்தவாய்க்கிளைதண்ணுமைபற்பல
நிரந்தமள்ளர்நெருக்கமுழங்கலா
லரந்தைபோயதின்றுமெனவார்த்தவர்ப்
புரந்தமங்கையரங்கெதிர்போயினர். (௧௧)

போயபின்னர்ப்புனன்மறித்தாங்கவ
ராயசெய்வரம்பெங்குமமைத்துநின்
றேயமேதியினங்கொடுழுந்தொறுஞ்
சேயசங்கமுழுந்திகழ்செய்யெலா. (௧௨)

செய்யமாமணியைத்திகழ்பச்சையுந்
துய்யநீலமுஞ்சூழ்ந்தொளிர்கின்றது
வெய்யவன்பரிவேடமுடன்பெரு
வையமீதுவயங்குதல்போலுமே. (௧௩)

மேனிலாவெறிசங்கும்வெண்முத்தமும்
வானிலாவொடுதாரகைமானலா
லானவாவியுமம்புயராசியும்
பானுவின்கடல்பாய்கதிரொத்ததே. (௧௪)

தேடரும்மணிசெங்கணியென்னவந்
தாடிவானரமங்கையெடுத்தய
லோடிநோக்கிநெருப்பிதென்றூடியுள்
வாடிநொந்துமணிக்கைதுடைக்குமால். (௧௫)

துடைத்தழுன்றிலைத்தூர்த்தெறிகுப்பையைக்
குடைத்தலைச்சுடர்க்கோழிகள்சீப்பமண்
ணடைத்தமர்மணிகால்பட்டிலங்கலா
லுடைத்தபேடையுட்பெய்மணியொக்குமால். (௧௬)

கும்பமால்கரிக்கோடுபெயர்க்குமண்
விம்பமாமணிவிட்டுவிளங்கலாற்

பம்புகாரிடையம்புலிப்பாதியி
னும்பரிற்குசனெப்பநவிற்றலாம். (கள)

விற்றமாமணிக்கென்கொல்விலையெனச்
சொற்றவர்க்கொர்விலையெதிர்சொல்கலா
ருற்றசெஞ்சுடர்நாடொருமோங்கலா
லற்றையற்றையதிகமுரைப்பரால். (கஅ)

பரவுபேட்டொடுபோர்ப்புடையூர்க்குரீஇ
யிரவுகூட்டிடைத்தீபமிடும்படி
விரவுமின்மினியென்றுமின்கான்மணி
வரவுகொண்டுதன்வாய்கொடெடுக்குமால். (கக)

எடுத்துநீள்வரம்பேத்துசெய்யெங்கணு
மடுத்தநென்முளையாமெனவன்னமும்
விடுத்துவால்வளைவெண்டரளங்களை
மடுத்துவாயுறக்கவ்வுமருதமே. (உ0)

மேகநீரருவிப்பணைவிம்முற
நாகமாமணிநல்விளக்கேந்தவந்
தோகையாடசுரும்பிசைபாடுவு
தாகவோங்கலலங்குகுறிஞ்சியே. (உக)

குறித்தவேய்ங்குழலோதையுங்கோற்கொடு
மறித்தகாலின்மணிக்குரற்சும்மையும்
வெறித்தவேற்றுவியன்பறைக்கௌவையு
முறித்தயிர்க்கடையோசையுமுல்லையே. (உஉ)

ஏறுசங்கமொலிப்பவிலைத்தலைச்
சோறுதாழைசொரிதரப்புன்னைகண்
மாறில்காவணஞ்செய்யமணஞ்செய்வார்
வீறுகொண்டதுவெண்டிரைநெய்தலே. (உங)

நெய்தலீறுகுறிஞ்சிநிலந்தலை
செய்தநானிலமுந்திசைநான்கினு
மெய்தியிந்தவிலங்கையிலங்கலா
லுய்யுமெவ்வுளமும்பிறந்துள்ளதே. (உச)

## வேறு.

பிறப்பெலாமணியினீட்டம்பெருக்கலாமணியினீட்ட
மிறப்பெலாநடையின்பேரோயிலையெனுநடையின்பேரோ
சிறப்பெலாமுழுமெய்ச்சங்கந்தெருவெலாமுழுமெய்ச்சங்க
மறப்பெலாம்வரையிலாரம்வரையெலாம்வரைவிலாரம். (உரு)

ஆரணி முழக்கமெங்குமலைகடன்முழக்கமெங்கும்
வாரணஞ்சொரியுந்தானமன்றயவர்க்களிப்பர்தானம்
பூரணமாகுஞ்ஞானம்பொருந்திடாததுவஞ்ஞானம்
நாரணனனையபூவைநந்தனமெங்கும்பூவை. (உசு)

பூவெலாந்துய்ப்பவாசம்புனமெலாமுனிவர்வாச
மாவெலாங்குயிலினோசைமலையெலாங்குயிலினோசை
காவெலாமுயர்ந்ததாழைகழையெலாங்கமழுந்தாழை
பாவெலாமரனார்தன்சீர்பகர்வரிதன்னோர்தன்சீர். (உஎ)

அன்னைபோலளிப்பாருண்டியனைவருஞ்சுத்தவுண்டி
பின்னையென்னார்களையம்பெண்கடன்னிடையேயைய
மென்னையாளரன்விழாவேயெங்கனும்பெருவிழாவே
தன்னினேருழவாபண்ணைதன்கலையுணர்வோர்பண்ணை. (உஅ)

பண்ணுவர்மறையோர்யாகம்பாடுநர்க்களிப்பர்தியாகம்
நண்ணுளர்புரிவராடல்காவலர்புரிவராடல்
மண்ணுளர்புகழவுண்டுவருவிருந்தோம்பலுண்டு
எண்ணுநர்வினைவிலாரையேத்துநர்வினைவிலாரை. (உகூ)

வரையெலாமாரமாரம்வனமெலாநன்கார்நன்கார்
நிரையெலாஞ்சாலிசாலிநிலையெலாங்கன்னல்கன்னல்
தரையெலாநீலநீலந்தடமெலாநாறுநாறுங்
கரையெலாமன்னமன்னங்கடலெலாமீழமீழம். (௩௦)

ஈழமும்பளிங்குநேருமெறிநவமணியுமெல்லாந்
தாழுமண்மடந்தைநல்குந்தரளமுஞ்சங்குந்துப்பு
மாழியென்றொருநீர்த்தெய்வமளித்திடுவரைமீதுள்ள
வேழமென்றனேகமேகம்வெளிறுமுத்துக்குமம்மா. (௩க)

அம்பொன்மெய்யிலங்கைநீளத்தளவுநானூற்றின்காதம்
பம்புநாட்டகலமுத்திற்பாதியினுற்பதேற
வும்பராலயங்கள்கோடியொன்பதுண்டமரர்க்குள்ள
செம்பொனாலயங்கள்மூன்றுகோடியிற்றிகழுமாங்கே. (௩உ)

திகழ்ந்தமுத்திலகநிற்குஞ்செவ்விமாக்கோட்டினூடு
நிகழ்ந்தமாமேருக்குன்றநிகரொனநெடிதுதோற்று
மகிழ்ந்திடுமரகதத்தைமாணிக்கக்குவையின்சோதி
யுகழ்ந்ததனுலுமீசனுமைதனைமணத்தலொக்கும். (௩௩)

ஒக்கவானுயர்ந்துநம்பனுறுத்துதாணிறுத்துங்குன்றந்
தொக்கவெள்ளருவிநான்குசூழ்திசைதோறும்வீழ்த

லக்கருவரையிற்பாதத்தமரர்பூசித்ததீர்த்தம
புக்கதீவினைபோமாறுபொழிவதாம்புடையுளோர்க்கே. (௩௪)

புடைத்துமால்கரிக்கைவீசுங்கீழ்த்திரைச்சிகரமுற்றுந்
துடைத்திடுந்துகிலேபோலவெண்முகில்சூழ்ந்துலாவு
மடித்தபொற்சுவட்டிற்செல்காலடிக்கடியருக்கன்றேரிற்
படைத்திடுபரிதங்காலிற்படுமெனமறுகாற்பாயும். (௩௫)

மறுகெலாமரம்பைவெள்ளைவாரணம்புலவர்மல்கப்
பெறுதலாற்கற்பகத்திற்பிறங்கலாணிறங்கொளீழ
முறுதலால்வாசவன்றுருலவலாலமுதின்சாலை
துறுதலாலிலங்கைநாடுசுரேந்திரனுடைதொக்கும். (௩௬)

நாடருஞ்சிகரத்தும்பர்நவமணிப்புதியசோதிப்
பாடலம்விண்ணுமண்ணும்படர்ந்துகீழப்பளிங்குமுன்றி
லூடெழுநிழல்போயபபாலுரகமாமணியும்வெள்க
நீடரும்பாதலத்தினெறியுறப்புகுதல்போலும். (௩௭)

புகுந்தசீரிலங்கைநாடும்புலவர்பொன்னுடுந்தூக்கிப்
பகுந்தபோதந்தநாட்டின்படியணுக்குறைந்தபின்னு
மிகுந்தமாமணியாறபொன்னுண்மேன்மையான்மருந்தாலொத்த
திகழ்ந்தவானுடென்றுலுமிலங்கைக்குத்தோற்றதம்மா. (௩௮)

தோற்றுமிவ்விலங்கைநாட்டின்றொல்வளஞ்சிறிதிங்கேனுஞ்
சாற்றினனிசைக்குமிந்தத்தலத்திலுத்தரபாலாக
வாற்றணிவேணியன்னலருளுடனமருகின்ற
வூறறமில்கயிலைத்தோற்றமொருசிறிதுரைக்கலுற்றும். (௩௯)

ஈழமண்டலச்சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௫௪.

இரண்டாவது

## திருமலைச்சருக்கம்.

உரைத்தநால்வேதத்துச்சியொருதனித்தலைவனுகி
யிரைத்தலைப்பாம்புசூழ்வானுலயாலயன்மாலும்பர்
நிரைத்தபேரண்டகோடிநெடுமுகடணைத்துஞ்சாயக்
கரைத்தலைதெரியாவூழிக்கடல்புடைபெயர்ந்ததந்நாள். (௧)

நாளொன்றுநாளுஞ்செல்லுநவபெருங்கோள்களும்புத
தேளிருநகருமோதித்திசைமுகன்பதியுங்கோத்துக்
காளிமாமுகிலின்மேனிக்கடவுடன்பதியுங்கொண்டு
தாளறுத்தெவையுஞ்சாயத்தழீஇயதவ்வாழியெங்கும். (௨)

எங்கணும்பரந்தசீத்தமெறியலையலைப்பச்சிந்தித்
தங்குபேருலகேழ்கச்சராசரமனைத்துமாய்த்துத்
துங்கவெள்விடையான்மேனிச்சுடரிடையுயிர்கள்யாவும்
பொங்குபொன்னுருகித்தம்மிற்புகுவபோற்புகுந்துநின்ற (௩)

நின்றபேராழியூழிநிமலனிவ்வுலகையெல்லாங்
கொன்றிட்டுவிடுத்தசேனைக்குழாமெனமுழங்குகாலை
யன்றதன்றுப்பணீங்கவ்வருவனைகுமிழியாக
பொன்றலில்சோதிதாமாய்ப்புகவிளையாடிற்றங்கே. (௪)

ஆங்கெறிபுரவைவெள்ளமடங்கலுங்கார்மீதேறி
யோங்குயருலகத்தூடேயிழிந்துநின்றுலாவிமீண்டுந்
தேங்குநீர்க்கடல்போமாப்போற்சிவனளித்தகிலத்துற்ற
தாங்கருஞ்சுடர்கள்யாவுந்தனிச்சுடரடைந்ததன்றே. (௫)

அடைந்தவச்சோதிநாதமதன்மொக்குள்விந்துவாகப்
படாந்ததோரநேககோடிபரிதியிற் *படலைகான்று
சூடந்தபேருழியாழிக்கடலலைத்தாலுஞ்சால
விடந்துளங்காதுமேன்மேற்றிகழ்ந்துமீதெழுந்ததம்மா. (௬)

எழுந்ததுகுமிழியாயவெம்பிரானனந்தகாலங்
கொழுந்திரைக்கடலினின்றுபின்னொருகருணைகூரப்
பொழிந்ததுபடலைச்செந்தீபுணர்ந்ததுபுணரிமேலோர்
செழுந்தலைவெற்புமாலைசிறுபொடிபொடித்தசுற்றும். (௭)

சுற்றெலாம்பொடித்ததூளிசுதைமதிலாகமுந்நீர்
வற்றினும்வற்றாமொக்குண்மதிற்கொருசிகரமாக
வுற்றதோரிலக்கங்கோடியோசனையுயர்ந்திரண்டு
பெற்றபங்ககலமாகிப்பெயர்விலாக்கயிலையான. (௮)

ஆனவக்கயிலைக்கங்கமரும்பனையாகத்தொல்லை
யீனமில்சோதியோராயிரம்பெருஞ்சிகரமாக
வானநாற்றிசையும்வாயின்மற்றைநாற்சத்தியாகத்
தானமாயதற்குநாப்பண்டங்குமெங்கடவுடோற்றம், (௯)

* படலை - பரந்தவடிவு.

தோற்றிய தானும்பாகத்தோகையுமிருந்தவெல்லை
சாற்றியதோகைச்செங்கைத்தாமரைபிறந்தவிந்து
மாற்றருஞ்சோதியான்முன்வருவித்தவூழித்தீயை
யூற்றமோடுண்டுவெம்மையொருகணத்தமைத்ததாங்கே. (க0)

அமையுமக்காலத்தந்தவரும்பெருங்கயிலைக்குன்றத்
துமையுமெம்பிரானுமொன்றாயுறைந்துழியூழிமேனா
ளிமையவர்முனிவரண்டரிந்திரனரன்மால்வேதன்
சமையமுன்றுடைத்தாய்மீளச்சமைக்குதிதலைவவென்றாள். (கக)

என்றலுமிமைக்குளுன்னியிலங்குதன்வடிவத்தூடே
யன்றுருத்திரன்மால்வேதனண்டமண்டத்துளோரைத்
துன்றுவித்தவர்க்குத்தத்தந்தொழிற்குணம்பயிற்றிமுன்னர்ப்
பொன்றுபல்லுயிருமீளப்படைத்தனன்பொருவிலாதான். (கஉ)

படைத்தவத்தலைவரீசன்பணித்தவப்படியேகீழ்பாற்
கடைத்தலைக்கமடமாதிககனமூதண்டமீறா
யிடைத்தலைப்படுவயாவுமெவ்வுயிர்த்தொகையுஞ்செய்து
சடைத்தலையிறைவறகாணச்சயிலவெண்கயிலைபுக்கார். (கங)

புக்கவரிறைஞ்சிநின்றபொழுதுபூங்கமலத்தோனை
முக்கணன்பார்த்துவெள்ளிமுதுகுன்றமிதற்குநாப்பண்
டொக்கபேரவைக்குப்பீடநதொகுத்துநீசமைத்தியென்ன
வக்கணத்திருகைகூப்பியயனினிதமைக்கலுற்றான். (கச)

அமைவுறுகிரணநீலத்தடக்கிமுத்தருகுபோக்கித்
தமனியநீலஞ்சேர்த்துச்சலாகையிற்கால்கணூட்டி
யிமைதருமரிமானேந்தவியற்றியபீடந்தாங்கி
யுமையொருபாகன்முன்னருய்த்தனனுலகமுய்த்தான். (கரு)

உய்த்தவப்பீடந்தன்னையுருத்திரகணங்கணோக்கி
யத்தனுக்கொருதோராழியாயினவருக்கரொல்லா
மித்தலையின்றுபீடத்திருந்திடுகிலைமையென்னச்
சத்தியுஞ்சிவனுமந்தத்தமனியப்பீடஞ்சார்ந்தார். (கசு)

சாரணிசடிலத்தெம்மான்சத்தியோடுறைந்தவெல்லை
யாரணன்முதனமூவோருமரகரவெனக்கேட்டும்பர்
சீரணிமுனிவர்நாகர்சித்தர்கோடியக்கர்மிக்கோர்
வாரணிமுலைத்தமாதருடனவர்வந்துபுக்கார். (கஎ)

புக்கனர்பழுமரத்திற்புட்குலம்புகுவபோல
நக்கன்மாக்குன்றஞ்சூழ்வார்நவிலுமக்குன்றிற்சால

மிக்கவெங்களிற்றின்கூட்டம்பிடியொடுமருவியேறற்
றக்கதேயுவமையல்லாற்சாற்றலாமுவமையுண்டோ. (௧௯)

உண்டிலையென்னநின்றமருங்கொடுமொருங்குகோடி
வண்டிமிர்குழலார்வெள்ளிமலையிடைத்தொடருந்தோற்ற
மண்டமூன்றும்யாவுந்தழுவியவசலஞ்சூழ்ந்த
தண்டலில்பசும்பொற்சோதித்தளிர்க்கொடிபடர்வபோலும். (௧௧)

படரொளிச்சிலம்புபம்பும்பாவையர்பதத்துச்செம்பஞ்
சிடரடிச்சுவட்டிற்பற்றித்துலங்கியகயிலைதோற்றங்
கடவுள்வெண்பாலின்வேலையிடையிடைக்கமலம்பூத்த
தடைவினைநிகர்வதல்லாலல்லதுசொல்லலாமோ. (௨௦)

ஆமிவர்சாயலாலுமருமடநடையினாலு
மேமுறுமினமென்றெண்ணியிளமயில்பிடியொடன்னந்
தாமவார்குழலார்சொல்லுந்தாளிணைபிறகேசெல்லக்
காமுறலனேகமென்னின்மகளிர்தங்கணக்கார்சொல்வார். (௨௧)

சொல்லருமரம்பைமாதர்சுரிகுழன்மலருந்தேவர்
மல்லலம்புயத்திற்றுங்குமாலையுமியக்கர்மார்பி
னல்லளிகுமுறுந்தாருநாகர்தம்முடியிற்போது
மெல்லையில்கோடிகாதம்பரிமளித்தெழுந்ததாங்கே. (௨௨)

வேறு.

ஆங்குவானவர்மவுலியிற்செம்மணியழகும்
பாங்கின்மாதர்தங்கருங்குழற்கருமையும்பலவா
யோங்கல்வெள்ளிவெண்பளிங்கொடுநிழல்விடவோடை
தாங்குமாம்பலுஞ்சூழ்வருவண்டுபோற்றயங்கும். (௨௩)

தயங்குகின்னரர்வீணையின்சுருதியுந்தகையோர்
முயங்குமங்கையர்சிறுமொழிமழலையுமுயங்கும்
வயங்குபல்லியந்தமலையுமறையின்வாயொலியு
மியங்குமண்டவான்முகடளவிசைபடவிசைக்கும். (௨௪)

இசைக்குநூலொடுமுப்புரிநூலினரிருக்கை
யசைத்தகுண்டிகைத்தண்டினர்மரவுரியரையர்
குசைப்பசும்புல்விரிசடைமுடியினர்குழுமித்
திசைக்கடோறும்பல்லாயிரகோடியர்செறிந்தார். (௨௫)

செறிந்தகாய்கனியுண்டியாற்றிருவுருப்புலர்ந்தோர்
நறுந்தனீர்த்தொகைமலர்கொய்துமுனிவர்க்குநயப்போர்

குறைந்தசிற்றிடைவற்கலையுடுத்தகொம்பனையா
ரறைந்தமாதவர்பன்னியர்துன்னினரநேகர். (உகூ)

துன்னியிம்முறைம்களிருங்கடவுளர்தொகையுங்
கன்னிநாண்மலர்ப்பெருமழைசொரிதருங்கரத்தார்
நன்னராசிசொனுவினர்நடைநடைதோறுஞ்
சன்னிதித்தலைநோக்கியேவிழுந்தெழுந்தலையர். (உஎ)

தலையுருத்திரகணத்தவரநேகர்செஞ்சடையர்
நிலவெறித்தவெண்ணீற்றொளிமேனியினிறத்தர்
கலைமதித்திருமுடியினுன்கயிலைமேற்பாலி
னலைகடற்பரந்தடைவதுபோலவந்தடைந்தார். (உஅ)

அடைந்ததேவராய்ப்பிறந்தவரநேகர்க்குங்கயிலை
யிடந்தனித்தனிவரவரப்பெருத்ததென்சொல்கேன்
கடந்துழுதண்டம்யாவையுங்காட்டியபரைதன்
படர்ந்தமேனியாம்பழைமையும்புதுமையோபகரில். (உகூ)

பகரில்வெள்ளியங்கிரிதனைபெரிதெனப்பகர்கோ
சிகரமால்வரைநீளமுள்ளளவெலாஞ்செறியு
நிகரில்வானவர்குழாந்தனைப்பெரிதெனநினைக்கோ
மகரநீர்மணலெண்ணினுமெண்ணொணமனத்தால். (ஙo)

ஆலமுண்டவர்கயிலையையிவ்வண்ணமணுகு
மேலையிந்திரன்முதலினோர்விழிப்புனல்பொழிந்து
சாலநந்திகைப்பொற்பிரம்பேவலாற்றலைவன்
கோலவாயிலுங்கடந்துபொற்கோயிலுட்புகுந்தார். (ஙக)

தாரகைக்குலந்தழுவமீதொருதலைப்பிறைக்க
ணுருஞ்செக்கர்போலக்குடன்பிறையணிந்தவனை
யீரநாண்மலர்விரிஞ்சனன்றியற்றுபீடத்தின்
மேருமால்வரைபவளவெற்பென விருந்தவனை. (ஙஉ)

இருக்கும்பேருலகேழினோடேழையுமேந்தும்
பெருக்கும்வாளராக்கங்கணம்பிறங்குகையவனை
யுருக்குந்தீயிடையரக்கெனவுமையுமுள்ளுருகத்
திருக்கடைக்கணுனோக்கியதிருமுகத்தவனை. (ஙங)

முகமுகத்துடனெதிர்ப்பட்டக்கண்களான்முகந்து
நெகுநெகுக்கனிந்தென்புறவுருகிநின்றிரங்கி
யகமலர்ந்துதம்மெய்ம்முழுதங்நிலத்தழுத்தப்
புகவிழுந்தரகரவெனமுறைமுறைபுகழ்ந்தார். (ஙச)

வேறு.

புகழ்ந்தனர்சிலர்தங்கண்ணீர்பொழிந்தனர்சிலருள்ளன்பு
நிகழ்ந்தனர்சிலர்பெம்மானைநினைகிலார்செனனந்தன்னை
யிகழ்ந்தனர்சிலர்தூரத்திலிகந்தனர்சிலர்கைகூப்பித்
திகழ்ந்தனர்சிலர்பொன்மாரிசிதறினர்சிலராய்நின்றார். (௩௫)

நின்றகலாதசோதிநிழலெனக்கோடிகோடி
துன்றுமெண்டிசைகடோறுஞ்சுராதிபரோந்துஞ்சோதி
யன்றொருகுமிழியாய்நின்றருளுநாளமர்ந்தசோதி
யின்றுபற்பலவாய்த்தோன்றிற்றென்னலாங்கயிலையெங்கும். (௩௬)

எங்கணுமெழுந்ததூபத்திட்டசீதாரிக்கந்த
மங்குறநிறைந்துதிக்குமண்டமுநிரம்பித்தெய்வத்
திங்கள்சூடியவெம்பெம்மான்சிவலோகத்தெருக்கடோறும்
பொங்கியதென்றாலந்தப்பெருமையார்புகறற்பாலார். (௩௭)

மாலலைப்பள்ளியானும்பங்கயத்தயனுங்காணக்
காலிணையெவருங்காணக்காட்டியகடவுட்குன்ற
மேலுறப்பொழிபூமாரிவேலைநீடுயிர்த்துமாறு
யேலநாண்மலரைமொண்டுண்டிறைப்பதுநிகர்க்குமம்மா. (௩௮)

மர்தவர்முனிவர்வானோர்வழுத்தியமுழக்கத்தோடே
யோதியகாளதாளமுதல்வலம்புரிப்பேரோதை
சோதியைவணங்கப்போந்தார்சுரரொனத்தொடர்ந்துபின்வந்
தோதவேலைகளோரோழுந்துதிசெய்வதொக்குமன்றே. (௩௯)

வேறு.

மன்னியவிந்நிலைவானநாடருந்
துன்னியமுனிவரும்பிறருஞ்சோதியைச்
சன்னிதிவந்துகண்டிறைஞ்சித்தாண்மலர்
சென்னியிறபுனைந்துதந்துயரஞ்சிந்தினார். (௪௦)

சிந்தைநீசிந்தையிற்றெளியுஞ்சோதிநீ
யெந்தைநீயாயுநீயெங்கட்காவிநீ
விந்துநீநாதநீமேலுங்கீழுநீ
பந்தநீவீடுநீபகலுமல்லுநீ. (௪௧)

நீயலாற்பிறிதிலைநிலமுதற்பிறப்
பார்புவைம்பூதங்களங்கங்காயினை
நாயகநின்பதநளினம்போற்றுதற்
கேயதுபெருந்தவமென்செய்தேமரோ. (௪௨)

## வேறு.

செய்யுமெத்தவமேபோற்றிசிவபரம்பரனேபோற்றி
வையகம்படைத்துங்காத்துமழித்துயிர்துடைப்பாய்போற்றி
ஐயனேபோற்றியெம்மையாண்டநாயகனேபோற்றி
தையலோர்பங்காபோற்றிதாணுவேபோற்றிபோற்றி. (சங)

போற்றியேமறையுந்தேடும்பூங்கழற்புண்டரீகஞ்
சாற்றியவெமக்குத்தந்தாய்தண்ணளியெளிமையென்னே
வாற்றலையொலிக்குஞ்சென்னியமலனேயின்றுநின்ற
தோற்றம்போலென்றும்யாங்கடொழுகமுன்னிற்கவென்றார். (சச)

என்றவர்மீண்டுமீண்டுமிணையடிபணியுந்தோறு
மன்றவர்மோலிமாலையாதனச்சோதிக்கற்றை
குன்றமாகயிலையெல்லாங்கோடிபல்வெய்யோர்போல
வென்றிவெங்கிரணச்சூழல்விரிந்தெனவிரிந்ததெங்கும். (சரு)

விரிகதிர்த்தரளக்கொங்கைமெல்லியலரம்பைமாத
ரரிவையர்பிறரும்யாருமம்மைமுன்னிறைஞ்சியெம்மைத்
திருவடிக்கடிமைகொண்டின்றிருவருள்சுரத்தியென்னப
புரிவளைக்கரங்கள்கூப்பிப்புகழ்ந்தயனின்றாரன்றே. (சசு)

அன்றந்தவமரவெள்ளமனைத்தையுநனைத்தண்டாமக்
கொன்றையஞ்சடிலக்கோமான்குளிர்மலர்க்கடைக்கணோக்கி
நின்றதோர்நந்திதன்னைநின்கையிற்பிரம்பானீக்கி
யின்றவையாகநிற்பித்திருபுறநிறுத்துகென்றான். (சஎ)

நிறுத்தினனந்தியந்தநெடியமாலயனுந்தெய்வத்
திறத்தொருகோனும்வானோர்தொகுதியும்பிறருஞ்சேரக்
குறித்தவங்கிலையேநின்றுகூப்பியகையராகி
மறைத்தபேருலகைமீளவகுத்தவாறுணர்த்துகென்றார். (சஅ)

உணர்த்தருமுலகையெல்லாமுதநிகொண்டலைத்தவெல்லைக்
குணிப்பருமனந்தகாலம்பரையொருகுமிழியாகத்
தணிப்பிலாக்குமிழிக்கேயாமொளியெனத்தரித்துநின்று
பணித்தனமூழிச்செந்தீயதுகடல்பருகிற்றன்றே. (சகூ)

பருகலுங்குமிழியிந்தப்பருப்பதமாயிற்றங்கண்
மருவினந்துணைவியோடேமறித்துநம்வடிவத்தாடே
யருநெறிமூவரைத்தந்தவர்பொருட்டகிலமெல்லாம்
விரிதரச்செய்வித்திந்தச்சேடனைவிடுத்தோமென்றான். (ருo)

என்றலுமிமலையூர்தியிறைஞ்சிநின்றைம்பூதத்தா
லுன்றிருவருளாலெந்தவுலகிற்குநிலைமையல்லா
லொன்றியும்பிறிதொன்றில்லையாதலாலெமைச்சொலாது
வென்றியிற்சேடனேந்துமென்றதென்விமலவென்றான். (ருக)

வேறு.

ஆனகாலையங்கரவினுக்கரசனின்றழலா
லூன்மொன்றிலார்பற்பலரிருப்பநீயொருவன்
மானவென்வலிசொல்லலுமனம்பதைத்தெழுந்தா
யீன்றநின்மதிகாண்மதியென்பதிங்கிதுவே. (ருஉ)

இதுமொழிந்தநின்றன்மையெத்தனைக்குமீறாக
வதிருமாயிரம்வாயிலோர்வாய்க்கடையமையும்
வீதுவுஞ்செங்கதிர்க்கடவுளும்விழுங்குவனென்றால்
முதிருந்தேவர்முன்னீகொலோவிகழ்ந்தனைமூவாய். (ருங)

வாயினாற்சிலசொல்லலாம்வருவதொன்றுளதோ
நாயகன்றிருவருளினானுமிருவோருந்
தீயபூசலையியற்றினாற்றெரியுமிங்கென்றான்
மேயவாயுவுநகைத்தெதிராபுகையெழவிழித்தான். (ருச)

விழிகண்மூன்றுடையெம்பிரானேவலால்விதித்த
வழிவில்பேரண்டச்சராசரமனைத்திற்குநினக்கு
முழுதுமாவியுள்யானொருமுயக்கமாய்முயங்காப்
பொழுதுநிற்குநில்லாதெனவறிகிலைபுல்லோய். (ருரு)

ஓயவோய்ந்துநானொழித்தபோதொழிந்ததிவ்வுலகிற்
காயுமாதியவனாதியாய்வருவதுங்கருதாய்
நீயிருக்கிலென்பொருகிலெனீயுமோர்பொருளோ
மேயகோபுரந்தாங்கியென்றுரைப்பதுவிருதோ. (ருசு)

விருதுகூறியநின்வலியென்வலிவிரைவிற்
பொருதுகாண்குதுமென்றலுமுரகனும்புகைந்து
வருதியென்றனனிருவருமிறைவனைவணங்கித்
தருதிபோரெனப்போர்க்கிடங்கொடுத்தனன்றலைவன். (ருஎ)

தலைவன்கூறியபணியினாற்றமணியமேரு
நிலவுமாயிரஞ்சிகரமுந்திசைதிசைநெருங்கப்
பலபணாமுடிபரப்பிநான்மறைப்பனீபதிக்கி
னுலகெலாமுனக்கொருதனித்தலைமையுண்டென்றான். (ருஅ)

உண்டெனப்பரிபவம்பெரிதுரைத்தவாயுடைத்து
மண்டுசூடிகைப்பொறிப்படங்கிழிபடமலைந்து
சண்டஆழியினுலகெலாந்தவறினுந்தவறாக்
கொண்டன்மால்வரைச்சிகரமுங்கொள்வன்யானென்றான். (௫௯)

என்றவாயுவுஞ்சேடனுமெதிரெதிர்மலைந்து
நின்றபூசலைநோக்குவம்யாமெனநிமலன்
றன்றுணைப்பெருந்தேவியுந்தானும்வானவருஞ்
சென்றுமுன்றிலிற்போந்துபுன்முறுவலுஞ்செய்தான். (௬௦)

செய்யசூடிகைப்பொறிபடம்விரித்தவச்சேடன்
மொய்கொளாயிரங்குவடுமுட்புதைபடமூடி
யையன்வெண்ணிறக்கயிலைக்குச்செந்நிறத்தநேகந்
துய்யமாமணிக்கோளகைவிரித்தெனச்சூழ்ந்தான். (௬௧)

சூழுமாருதக்கடவுளுஞ்சுழித்தெறிந்தார்த்தான்
பாழிமேருவேமுதலியபருவரைக்குழாமு
மாழியம்பெருங்குன்றமுமடிபெயர்ந்தசைய
வூழிகாலமோவீதுகொலென்றுலகுளோருலைந்தார். (௬௨)

உலைந்தவாயிரகோடிபேரண்டமோடுலக
மலைந்தபூசனுமலைபவன்பவனனுமாகக்
கலைந்தவெள்ளிவெற்பதிலொருபெண்ணெனக்கறங்கத்
தொலைந்துமண்ணொடுவிண்முதல்சுழல்படச்சுழன்றான். (௬௩)

சுழலுமேழ்கடற்பரப்பெலாஞ்சிறுகுறுந்துளிபட்
டுழலுமெண்டிசைக்கிரிபொடிபறக்குமென்றிசைத்தாற்
றழலுநீத்தமும்விண்ணுமண்ணுந்தடுத்திடினு
மழலுமாருதத்தெதிசினமடங்குமோவடங்கா. (௬௪)

அடங்குமப்பொழுதமரருமுனிவருமயனும்
படங்கொள்பாயலான்முதலியபலருமெம்பகவு
னிடங்கொள்சேவடியிறைஞ்சிநின்றினியொருகணத்தி
லொடுங்குமண்டமுஞ்சராசரக்குழாங்களுமுரவோய். (௬௫)

உரமிரண்டினுமொன்றொடொன்றிழிபடாதொருவர்
விரவுமோர்தலைவிலக்கலோநன்றெனவிளம்ப
வரவையாயிரங்குவட்டிலோர்குவடுவிட்டகலச்
சுரரியம்புமினெனவிளம்பினனுமையவடுணைவன். (௬௬)

துணைக்கைகூப்பினரோடினர்சொல்லினர்சேட
னணைக்குமாயிரம்பணமுடிக்கொருமுடியகற்றப்

பணைக்குமச்சிகரந்தனைக்கையுறப்பறித்துக்
கணைக்குநேர்கண்ணிபங்கன்முன்வைத்ததக்காலே. (சுஎ)

காலமீறெனவிறந்திடாதுலகெலாங்காத்த
தாலவாளராவொருபடஞ்சாய்ந்தெனவறைந்தார்
மேலைவானவர்நீலனைநோக்கியுன்வீரம்
போலுளாருளர்வீரமென்றவனையும்புகழ்ந்தார். (சுஅ)

புகழ்ந்தவாயுவைக்கயிலையின்றென்புறம்போந்து
திகழ்ந்தவித்திரிகூடமாஞ்சிகரத்தையேந்தி
மகிழ்ந்தியாமதில்வருகுவந்தென்கடன்மருங்கே
நிகழ்ந்தவீழத்தின்வடகரைநிறுத்துநீயென்றான். (சுகூ)

வேறு.

என்றரன்றிரிகூடவெற்பிலெழுங்கொழுந்துறவேறினன்
துன்றுமாலயன்வாசவன்சுரநாடர்சூழவணங்கினார்
நின்றவாயுவைநோக்கியிந்தநெடுங்குவட்டினையேந்தென
வன்றுகூறினனென்றுநாகமதாடவம்புலிசூடினான். (எ0)

அம்புராசிகொளூழிபோயபினுமுகம்பதினெட்டினும்
நம்புசீரவியத்தமாநிடக்குமிந்தவுகத்துளே
விம்பர்வாழவிலங்கையிற்கடிதெய்துவந்திரிகூடமோ
டிம்பர்மாலயனீவிர்வம்மெனவோதினானுலகாதியான். (எக)

ஆதிகேசவனுஞ்சிவாசவனமரர்நன்பரிவாரமாய்ப்
போதவேதணியற்றியிட்டசடங்கினிற்கலைபுகலநீ
யோதவேலையிலங்கையுத்தரமுயரும்வெற்பினடிக்கொரு
தூதுபோற்கதவிட்டுமீதுதரித்தனன்னமருத்தனே. (எஉ)

அருத்திசித்திரையுத்தராயனமாதபத்தினமத்தநாட்
குருத்திகழ்ந்திடுமோணைபூரணைகூடுமானியம்வேனிலாம்
பருத்தமாமகரத்துமுன்னொருபங்குறத்திரிகோணமிங்
கிருத்துகாலமெனத்தெரிந்தயன்யாவருக்குமியம்பினான். (எங)

நானிலம்பெருமகளுடுத்தகடற்குள்யோசனைநண்ணிய
மேனிலத்தினையாறுதீண்டுமிமிர்ந்தடிப்புடைவிரவின
வானகாவதநான்குகொண்டுதன்வளர்கொழுந்திடமைந்துமுன்
றூனதண்டிடைபெற்றதக்குவடண்டகூடநிகர்த்ததால். (எச)

அண்டர்நாயகனக்குவட்டிடைக்கங்கைபொங்கவழைத்தன
னெண்டிசைக்குறுடுப்படச்சிவலிங்கமேனிதிகழ்ந்துநீள்

விண்டதோர்ககனக்கபாடமொருவுபாதலமீதுவேர்
கொண்டுமேவினமேலனேகருச்சனைப்படிகொள்ளவே. (எரு)

கொள்ளுமேனியடங்கலுங்குளிர்கங்கைகண்டதுகோதைகண்
டுள்ளமார்ந்ததெனெம்பிரானுனதடிபணிந்துலகுய்யவே
வெள்ளநின்பதமீதுநின்றிடநீயதன்புறமேவுற
வள்ளலேவருகென்னவந்தனன்மாறிலாவிடையேறினான். (எசு)

ஏறுமித்திரிகூடம்வந்திருந்ததிப்படியதனிடை
வீறினுத்தரமொருபெருங்குகையதின்முனித்தொகைமேவிடுங்
கூறுதென்குகைமணியுதும்புனன்முத்தமுங்குடகுகைபெரு
மாறிலானுளதுகைகையிற்புகவழிதருங்குகைபூருவம். (எஎ)

உவந்ததோர்நிருதித்திசைக்குகைவெள்ளியாலயமுள்ளுற
நிவந்தபூதமதொன்றுநின்றிடுநெடியவாயுதிசைக்குகை
சிவந்தநாகருலோகமேல்வழிசெல்வதீசர்திசைக்குகை
தவந்தாத்தருமுத்தியிவ்வகைகுகையொரேழ்வகைசார்ந்ததே. (எஅ)

தேடும்வெற்பினிலுட்பெருஞ்சுனைசென்றுதுன்னியசேவடி
நீடுபாடலமப்புறந்தொழநின்றநாதனையிப்புற
நாடுமண்டலமண்புறத்தொழநண்ணினானுயிர்விண்ணுளே
யோடியோரொளியாகிநின்றருளுன்னினான்மறைமன்னினான். (எகூ)

வேறு.

மன்னினானரணித்திறமப்பெருவனைக்க
ணன்னமாலவனைபபெருமையையாவரோயறைவார்
மின்னுவெள்ளியும்பேரொளிவெண்ணிலாவெறிப்பத்
துன்னுகார்க்கடல்பாற்கடலாயதத்தோற்றம். (அ0)

தோற்றும்வெண்ணிலாமிளிர்கின்றசோதியங்கற்றை
வீற்றிருந்தவான்புடையுடுக்குலமிடைத்தென்னப்
பாற்றரும்பெருங்கயிலையின்புறமெலாம்பணிலத்
தேற்றினங்கடற்றிரையொடுங்கரைதவழ்ந்தேறும். (அக)

ஏறும்வெண்கதிர்க்கற்றையேழ்குகைதொறுமிமறித்து
வீறுபாதலந்திசைதொறுமிருளறவிளக்கச்
சீறுநாகர்தம்பணமுடிமாணிக்கச்சிவப்பு
மாறிலாதவெண்முத்தமாய்வெளுத்ததெம்மருங்கும். (அஉ)

மருங்கெறிக்குமண்ணுலகெலாம்பரப்பிவானுலகி
னெருங்கும்வெண்சுடர்க்கற்றையானிறம்பிறிதாகிப்

பெருமைகதிர்ச்செழும்பரிதியுங்குசனுமம்பிறரு
மொருங்குவெண்மதிக்கடவுளாய்விளங்கினருடலம். (௮௩)

உடனெதிர்ந்துமுன்மாலயனுருத்தநாளுமைதன்
னிடமிருந்ததோரெம்பிரான்றழல்வடிவெடுத்துப்
படருமேனியினீற்றொளிபூத்தவப்படியே
கடவதன்றியும்வேறிணையில்லைத்தென்கயிலை. (௮௪)

கயிலையங்கிரிக்குழுவொடுதழுவியகன்னி
மயிலியாவையுமன்னமதாக்கித்தன்வடிவாற்
சயிலமேநிகர்கருங்களிறனைத்தையுந்தாரும்
பயிலுநாட்டயிராவதநிறம்பெறப்பண்ணும். (௮௫)

நிறந்தமால்வளைக்கருங்கடற்புடைதழீஇநிமிருந்
திறத்தையுமதன்சுடர்வடிவனைத்தையுஞ்செப்பிற்
புறத்துலாவருமாழியாமூழியம்போழ்து
மறித்தடங்கையானெழுபெருங்குமிழியைமானும். (௮௬)

மாநிலப்பெருந்தகழியின்மறிகடனெய்யி
லானவக்கிரிநிறுத்தியவிழைத்திரியதன்மேன்
ஞானநாயகனுலகுளோர்மனவிருணலிய
மேனிமீதுறவெறிசுடர்விளக்கெனவிளங்கும். (௮௭)

விளங்குநாற்பெருந்திசைதொறுந்திசைதொறும்வீசித்
துளங்குசீகரத்திவலைவெண்முத்தொடுதுளித்தல்
களங்கவல்வினைநீங்கினதாமெனக்கடலுந்
தளங்கொள்பூமழைபொழிந்தடிதாழ்வதேநிகர்க்கும். (௮௮)

நிகரிலாச்சிவனெம்மையேதாங்கினனித்தம்
பகருமங்கவன்றன்னையும்பரிப்பமென்றெண்ணிப்
புகரிலாக்கங்கைதிரண்டுமுக்கோணமாய்ப்பொருந்தி
மகரவேலையினிற்பதேபுரையுமிவ்வரையும். (௮௯)

வரையறப்பலதேவரொம்மருங்குசூழ்ந்திறைஞ்சப்
புரமெரிக்குநாண்மாலொருவெள்விடைப்பொற்பாய்ப்
பரமனைப்பரித்ததுவெனப்பகரலாம்பரவைத்
திரைநடுப்படவிம்மலைநிலைக்குமிச்செய்கை. (௯௦)

செய்தவத்துளோர்தேவருத்தரத்திருக்கயிலைக்
கெய்துவார்களிக்கயிலையின்வாமமக்கயிலைக்
குய்யமேவுவாருத்தரகயிலையுற்றிடவு
மையமாக்கியததற்கிதுவடிவினுலம்மா. (௯௧)

மாலையந்துழாய்மணமுமத்தாமரைமணமு
மேலைநாட்டுறைகற்பகவிரைமலர்மணமுங்
காலையந்தியுமுச்சியுங்கயிலையின்மணக்குஞ்
சாலவந்துவந்தமரர்மாலயனிவர்தாழ. (௬௨)

தாழுமால்கடல்வரங்கொலோவிலங்கையின்றவமோ,
சூழுநாவலந்தீவுளோர்புண்ணியத்தொடர்போ
வாழியுத்தரதிசையினுங்கொடுவந்துவைத்த
பாழிமாருதப்பயன்கொலோவென்பர்கள்பலரும். (௬௩)

கள்ளரும்புபூங்கொன்றையானுறைந்ததென்கயிலை
வெள்ளியங்கிரியிவ்வகைவிளங்கிய்திப்பா
லள்ளல்வேலைநஞ்சுண்டவரருச்சனைக்கனேக
ருள்ளமன்பொடுதொடர்கதையாயதிங்குரைப்பாம். (௬௪)

திருமலைச்சருக்கம் முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௧௪௮.

---

மூன்றாவது

## புவனோற்பத்திச்சருக்கம்.

ஆயநனசிவலிங்கமென்னுமருபமாகுமுருவினை
நேயமுற்றவருச்சனைக்கதுநிச்சயபபொருளாமெனச்
சேயுருத்திரன்வேதன்மாலிவர்செய்யுமர்ச்சனைகாணவே,
தூயமெய்ப்புவனத்தின்மேலவருற்பவித்ததுசொல்லுவாம். (௧)

சொல்லுறும்பதினெட்டெனப்புவிதுன்னுகின்றவுகங்களில்
வில்லுலாமவியத்தமாதிவியத்தம்விந்தமலங்குதம்
வல்லவாமகிலங்களானமகாவுகங்களொரைந்தினு
நல்லதென்கயிலாயவாதியைநாடிவந்தனர்சங்கரர். (௨)

வேறு.

சங்கரன்கிரீசன்சம்புசமர்நடன்பகவன்சூலி
கங்கையன்விருபன்மூர்த்திகலாதரன்வாமனீச
னிங்குருத்திரர்கள்பன்னொரிறைவர்தென்கயிலைமீதி
லங்குளபரனையன்பாயருச்சனைசெய்யுங்காலம். (௩)

செய்திடுபூசைநோக்கிச்சிறக்குமவ்வியத்தாலந்தத்
துய்யவர்காயந்தோற்றத்துலங்குதாரகைகடோற்ற
வையனுக்கபிடேகத்துக்காகவென்றுதகந்தோற்றப்
பொய்யிலாவிந்தக்காலம்புவனிவித்தாகத்தோற்றும். (௪)

வித்தகன்கனலிவெற்பின்விளக்கெனக்கனலிதோற்ற
வத்தனையினாவற்கானவலங்குதமென்னுங்காலம்
முத்தடுத்தருக்கள்யாவுமுனிந்தொளிவிடுத்தான்வெய்யோ
னொத்தெழும்வெயிலையாற்றவுதித்தனன்குடபா * லாலோன். (௫)

ஆலமுண்டவர்தென்கோணையமலனுக்கானகால
மேலுருத்திரர்களேந்திக்கொடுத்திடுமிலைபூவாதி
தாலநின்மாலியங்கனேர்த்தலகிடுவார்போல
ஞாலமேல்வாயுவென்பானலத்தினுதித்துவந்தான். (௬)

வந்தனைசெய்யவேண்டிமலர்க்கரங்குவித்தசென்னி
யிந்திரனங்கிகாலனெழில்பெறுநிருதிநீர்ம
னந்தரவாயுச்சோமனரியவீசானன்றோற்றச்
சுந்தரவசுக்களெண்மர்தோற்றினரேற்றமாக. (௭)

தன்னலுமமுதுந்தேனுங்கனிந்தெனமுனிந்திடாத
வின்னசொற்கமலைவாணி † யெழுவகைமாதர்தோற்ற
வன்னிலையம்பத்தொன்றுமக்கரநிலைமைதோற்றப்
பொன்னெடுமணியொன்பானும்புகுந்தொளிவிளைத்துநின்ற. (௮)

விளைந்திடுதவமுமன்புமேன்மையுநெறியுஞ்செஞ்சொ
லளைந்திடநாவுமுள்ளவகத்தியன்முதலோர்தோற்ற
வளைந்திடுதிசையோரெட்டும்வரைகளோரெட்டுமெண்டோள்
கிளைந்தமாநாகமெட்டுங்கடாசலமெட்டுந்தோற்ற. (௯)

தோற்றமுநெறியுநேருந்துலங்கியவுலகோரேழு
மாற்றிடவெவர்க்குமாற்று ‡ மகோததியேழுந்தோற்ற
தோற்றியதீர்த்தமேழுந்தினங்கண்மூவேழுமற்றும்
போற்றுபொன்மேருவொன்றும்பொருந்தியங்கிருந்தகாலை. (௧௰)

காலையில்வருணனக்கீகலந்தவிஞ்ஞானவேத
மேலவாம்பதுமயோனியென்றுறுமுகங்களைந்தின்

---

* ஆலோன் - சந்திரன்.

† எழுவகைமாதர், கவுரி, அபிராமி, மாயேச்சுவரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி என்பவர்கள்.

‡ மகோததி - கடல்.

காலமெய்க்கமலமீதிற்குடிபுகும்பிரமரெண்மர்
பாஸ்புரைநீறுபூத்தபரமர்தாள்விரவவந்தார். (கக)

விரவினறுதிவேதன்விரிஞ்சன்மெய்ககமலவாசி
தன்ரீதொழுசயம்புமிக்கசதுமுகன்பதுமபூதன்
வரபிதாமகன்பூசிட்டிவயங்கியவெண்மர்கோனைப்
பரமனைவழுத்துங்காலம்பயின்றுளசிறிதுசொல்வாம். (க௨)

வாயந்திடும்வருணகாலம்வயஙங்னமெழுமேகஙக
ளேய்ந்திடுமக்கிகாலமிசைந்தனமுத்தியெங்கும்
போந்தவிஞ்ஞானகாலம்புகுந்தனவித்தையாவுந்
தோய்ந்தவேதத்தில்வேதந்துலங்கினதலங்கள்யாவும். (கஙு)

தலமிசைப்பதுமயோனிதனியுகம்புகுதுங்காலங்
குலவுமுப்பத்துமூன்றுகோடிநற்றேவர்தம்மோ
டலகிலாமுனிவர்தோற்றவவனிகண்முழுதுந்தாங்கி
நிலமிசைமுதன்மையாகநின்றதம்மேருவந்நாள். (கசு)

அந்தமாமேருவென்னுமசலமொன்றேழிரண்டு
தந்தபேரகிலம்யாவுந்தனித்தனிதோற்றத்தோன்றிச்
சுந்தரக்ககனச்சோதிதுலங்கிநின்றிலங்கிவெண்மை
சிந்துரம்பசுமைபொன்மைதிசைதிசைசிறந்துதோற்றும். (கரு)

## வேறு.

திசையிற்றிசைகக்னத்தொளிசென்றுற்றெழுமேரு
வசைவற்றிடவெழுபாதலமடையப்பதமுருவி
மிசையிற்பகிரண்டப்பெருமுகடுச்சியின்விரவி
நசையுற்றுலகிரேழினுநடுவேநெடிதுயரும். (கசு)

நயாத்தில்ரட்டி
யயர்வற்றிடுமடியிற்புடையாகப்புவிசெல்லும்
பயமிற்றுயர்சதிரச்சிரபந்தத்தியல்வடிவா
யியலுற்றதனடுவேயொருராசத்தருவுளதே. (கஎ)

தருவைத்தருமுடியிற்கொடுமுடியிற்றணிநீள
முருகுற்றெழுமளவோசனைமூவாயிரமுளதாம்
வருமப்படிமுடியாயிரம்வரைபெற்றுளதம்பொன்
னுருபத்திடுமணிபோன்மணியொளியைச்சொலவெளிதோ. (கஅ)

தோல்பச்சிலைகனிநாண்மலர்சுடர்பொன்படர்நாவ
நளமேறிக்கரசெழிலத்தியோர்கீழ்பா

லாலுத்தரமழகுற்றெழுமம்மால்வரையின்கீழ்
நால்திக்கினும்வழிபாதலநகரிற்செலவுளதே. (கக)

உள்வெங்கணுகிறையும்புனலூறுஞ்சுனைமாறு
திளகுஞ்சிறையெகினங்கிளியேனம்பிணைகடமா
களும்பம்பரிசிங்கம்புலிகைபெற்றிடுமுகமா
வளைவன்றியதினமாய்விளையாடும்புனலாடும். (உ0)

ஆடொன்றியமுகமாவுடனண்பாவனசரபங்
கோடொன்றியமதமாவொடுகூடன்புறுமரிமா
நீடும்பணிதன்னோடெதிர்நேராதனகலுழன்
நாடுந்திறமிவையேலெவர்நண்ணார்புகழ்பண்ணார். (உக)

பண்ணாறியவளிபின்றொகைபாடும்புதுமலரின்
கண்ணாறியதடமுங்குளிர்காணறியகடமும்
விண்ணாறியமுடியுந்தருவிரைநாறியவடியுந்
தண்ணார்முனிகணமுஞ்சுரர்கணமுந்தழுவிடமே. (உஉ)

இடமொன்றியவமமேருவினிடையிற்புடைமதியுங்
கடறுன்றியகதிருந்திசைகாணத்திரிதரலா
லடறுன்றியபகிரண்டமொடகிலாண்டமதெங்கும்
படமேவியவதனுக்கிணைபகரப்பொருளுளதோ. (உந)

வேறு.

தோமுறுமொருபாலார்க்குச்சுடரவன்குடபாற்சேற
லேமுறுமொருபாலார்க்குக்கீழபாலாயெழுதலொன்றுற்
றேமுறுநான்குபாலின்றீவுக்குமிந்தசெம்பொன்
மாமலைவடபாலுள்ளமலையெனமதிக்கலாமால். (உச)

மால்வரையதனைச்சூழந்துவளைகின்றநான்குதீவுங்
கோலமாமோரோர்தீவுங்கோடியோசனையினூடே
யேலுமூன்றிலக்கம்பன்னீராயிரத்தைதஞ்ஞூறேகச்
சாலும்யோசனையுட்கொண்டுதனித்தனிவிளங்குமாதோ. (உரு)

விளங்குமத்தீவுட்டென்பால்விரிதருசம்புத்தீவு
களநகமிலதூறகிரட்டியுவர்க்கருங்கடலேசூழு
முளங்கொளுமதற்குமப்பாற்பிலக்கமென்றொருதீவந்த
வளங்கொளுந்தீவைப்பாலின்மறிகடல்வளையாநிற்கும். (உசு)

நிற்குமங்கதற்குமப்பானெடுங்கிரவுஞ்சத்தீவு
சொற்குலவந்தத்தீவைத்தயிர்க்கடல்சூழ்ந்துதேங்கு

முற்குறியதற்குமப்பான்முதகுசைத்தீவாமந்த
கற்குசைத்தீவைநெய்யினறுங்கடல்வளைக்குமாங்கே. (உஎ)

ஆங்கதற்கப்பான்மேவும்புட்கரமாகுந்தீவு
தாங்கருமந்தத்தீவைமதுக்கடற்சூழ்விவாழு
மீங்கதற்கப்பாலேசான்மலியெனவிசைக்குந்தீவா
மோங்குசீரந்தத்தீவையொலிபுனற்கடலேசூழும். (உஅ)

சூழுமங்கதற்கப்பாலேசாகமாந்தீவுதுன்னும்
வாழுமத்தீவைக்கன்னன்மறிகடற்பரவைமேவு
மேழ்பெருந்தீவுமிவ்வாறேழ்பெருங்கடலுமந்த
வாழியஞ்செம்பொற்குன்றம்புறங்கொளவகத்துளாமால். (உகூ)

மால்வரைச்சம்புவிற்கும்பிலிக்கமற்றதற்கும்வன்மை
சால்கிரவுஞ்சமந்தத்தீவுக்குங்குசையத்தன்மை
கேல்வருபுட்கரத்தீவிதற்குஞ்சான்மலியீதிற்கு
மேல்வருசாகமொன்றென்றிரட்டிவேலையுமிவ்வாறே. (௩0)

இவவகையோசனைபபானூற்றிருபத்தைங்கோடி
செவ்வகையிதற்கிரட்டிகடலுமாய்த்திசைகடோறு
மெய்வகைமேருவெற்பைச்சூழந்தமண்விளங்குமெல்லை
யவ்வகையைஞ்ஞூறுழியாயிரகோடியாமால். (௩க)

ஆயவிவ்வுலகமெல்லாஙகவிப்பதோரண்டமந்தச
சேயபேரண்டமந்தவண்டமாய்த்திருப்பேர்செப்புந்
தூயவங்கதற்குமாழிகிரிக்குமபபுறமாய்ச்சூழப்
பாயிருளகடியுஞ்சோதிபகிரண்டம்பயிலுமன்றே. (௩உ)

## வேறு.

பயிலுமங்கதுபன்னவொண்ணாதது
வெயிலும்வெண்ணிலவும்மிளிராதது
செயலெவர்க்குந்தெரிவரிதாயது
மயலிருட்பிணிமாசொன்றிலாதது. (௩௩)

துன்னுமாருதமெங்குந்துவண்டது
மின்னுபேரொளிவெள்ளம்விழைந்தது
கன்னிமாவிஷ்ணும்வேதன்காத்திறு
மன்னுமேனிவகுப்பரிதானது. (௩௪)

ஆனவப்பகிரண்டமடங்கலு
ஞானமாயொருசோதிநயந்தது

தானமற்றது தன்னுடலற்றது
பானமற்றதுபாவனையற்றது. (௩௫)

அற்றநுண்பரமாணுவிலெட்டிலொன்
றிற்றவண்ணமுமில்லையெனுஞ்சுடர்
பற்றிநின்றபராபரமானது
நற்றுமங்கதினாதமெழுந்தது. (௩௬)

எழுந்தநாதமதின்றதொர்விந்துவை
யழுந்துவிந்துவதனுட்சதாசிவங்
கொழுந்துவிட்டதுபட்டொருகோயிலாய்
விழைந்துநின்றவெளியினிருந்தது. (௩௭)

இருந்தகாலமகேசனுமீசன்மால்
விரிஞ்சனாதியவிண்ணவர்யாவரும்
பரிந்துவந்திருபாதங்களைக்கையாற்
றெரிந்துதண்மலர்சிந்திவணங்கினார். (௩௮)

வணங்குமன்றொருவாலப்பிரமனை
யிணங்குவிச்சுவகன்மனையேவியே
யுணங்குபாகனழைத்தவனர்ச்சனைக்
குணங்கொழுங்கதைகூறலுற்றாமரோ. (௩௯)

புவனோற்பத்திச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௮௭.

நான்காவது

## அர்ச்சனாவிதிச்சருக்கம்.

அரனருஞ்சுடராயபரம்பரன்
பரவுமாறிருவுந்தியிற்பங்கயம்
விரவுவேதன்வெளிப்படவிச்சுவ
கருமனைத்தனிகாட்டுவமென்றரோ. (௧)

ஓதவந்தங்குதித்தவற்கோதுவான்
மாதவன்றிருப்பள்ளிவளர்ந்தது
மீதெவர்க்குமமுதம்விளைந்தது
பாதகந்தெறவந்ததொர்பாற்கடல். (௨)

பாலடுத்தகடற்குளோர்பாந்தளுண்
டாலடுத்தமலர்களுண்டத்திரு
மாலடுத்தவயிற்றினுண்டோர்மலர்
மேலடுத்ததிலுண்டொருவேதியன். (௩)

அன்னதாமரைநீளமனேகமாய்த்
துன்னுமுள்வயின்சொல்லரிதாதலாற்
பொன்னிதழ்புடைமூடப்பொகுட்டினு
ளுன்னிநம்பதயோகத்துறங்கினன். (௪)

உறங்கும்வேதனைநீசென்றுணர்த்தியே
பிறங்குதென்கயிலாயப்பெருங்கிரி
திறங்கொள்பூசனைசெய்வித்தவன்குலக்
தறங்கொளெண்மரோடாகுதியென்றனன். (௫)

என்றுகூறவிறைஞ்சியேபாற்கடல்
சென்றுமாலையுஞ்செங்கைகுவித்தவன்
துன்றுமுந்தியந்தாமரைத்தோடெலாம்
வென்றிவிச்சுவகன்மன்விரித்தனன். (௬)

விரித்துநான்முகன்வெள்ளைவிடைப்பிரா
னருச்சனைக்குனையாங்கழைத்தானென
திருத்தனென்னைநினைத்தனனேவெனப்
பெருத்தவோகைப்பெருங்கடன்மூழ்கினன். (௭)

நான்முகன்றனயனமொரெட்டினு
மேன்முகந்தவிருப்பில்வரும்புனல்
பான்முகந்தபனிக்கடலெங்கணுஞ்
சூன்முகந்தமழையிற்சொரிந்தவே. (௮)

வேதமும்பெருவிண்ணவருந்தவர்
போதமுந்தணிதேடும்புராதன
னேதமுஞ்சினமும்மிகழாதவென்
மாதவங்கண்மதித்தவெவ்வாறரோ. (௯)

மதித்தநான்மலருச்சியின்வைத்ததாள்
விதித்தவென்கையிற்பூசைவிரும்புமோ
வுதித்ததிங்கட்கொழுந்தொளிருஞ்சடை
பதித்தவெள்ளறுகும்பலசூடுமால். (௧0)

மாலிழைத்ததவங்கொலம்மாலுறை
பாலிமைக்ககடல்செய்பலன்கொலோ

மேலிழைத்தவறங்கொண்மிடற்றிறை
லாலிழைத்தவரொன்னேயழைத்ததே. (௧௧)

அழைத்தசொற்கொடாகரவென்றெழுந்
திழைத்தயோகமொழிந்தெதிரன்பினாற்
தலைழத்தவிச்சுவகன்மனையுந்தழீஇப்
பிழைத்தனனிப்பிறவிநோய்க்கென்றனன். (௧௨)

பிறவிதீர்க்கும்பிரான்றனதர்ச்சனைக்
குறுவதெங்ஙன்யானுய்குவதெவ்விட
மறுவிலாதவசொல்கெனமற்றவ
னிறைவதென்கயிலாயத்திலென்றனன். (௧௩)

என்றலுங்கமலத்திலிழிந்தயன்
சென்றனன்பிரான்றீயினடம்புரிந்
தொன்றுமூழியழிந்தபின்பொய்யல
நின்றதேநிகரல்லதுநேருமோ. (௧௪)

நேருந்தென்கயிலைத்திசைநீள்வழி
யூருமன்னத்துடனவனூர்ந்தனன்
சேருமந்தத்திருமலைகண்டுளங்
கூருமன்பொடிழிந்துகைகூப்பினான். (௧௫)

நானநான்மலர்நான்முகன்றாழ்தலும்
மானவிச்சுவகன்மனும்வாழ்த்தியே
தானுமங்கைத்தலங்குவித்தேவிழி
யானபத்தினுநீத்தமரும்பினான். (௧௬)

நீத்ததெங்கணெடுவிலையென்றயன்
கூத்தன்குன்றிற்குளிர்சுனைமூழ்கியே
தீர்த்தமேந்தியதீர்த்தன்கயிலையை
யேத்தியாலயமுன்னின்றிறைஞ்சினான். (௧௭)

முன்புநின்னைமுடிப்புறத்தேதடியு
மன்பிலாமையஃதின்மைமாதவந்
தென்பிறந்ததிருவுருக்காணவின்
றென்பிறந்ததுமாதவமென்றனன். (௧௮)

என்றரன்றிருமுன்னரிசைத்துப்பின்
றுன்றுமாசனந்தோன்றவிருந்தயன்
மின்றுலங்கியமேனிசிலிர்ந்துசீ
ரொன்றுசானுவினுட்பதம்வைத்தனன். (௧௯)

வைத்தகண்டுளைத்துண்டம்வயங்கிட
மூத்தநன்னகைமெல்லிதழ்மூடிட
வத்தமத்திமவங்குலிநாசிமீ
துய்த்தருஞ்சிவமந்திரமுன்னினன். (உ0)

உன்னுநன்மைபிராணனொடுட்புகப்
பன்னுபாவம்பரன்றனோடேகிட
வின்னநாசியியற்றிப்பொருமினன்
கன்னமீதுமூக்காற்கரம்வைத்தரோ. (உக)

கரத்துடன்கரந்தைவரக்காட்டியா
னுரைத்தவங்குலியொன்றுடனொன்றுறப்
பரத்துளீசர்பதிஞெருமந்திர
நிரைத்தபாணிநியாசமுடித்தனன். (உஉ)

முடியின்மிக்கமுகத்தினினெஞ்சினில்
வடிவினுபியிற்சானுவின்மற்றுள
வடைவினங்கநியாசமமைத்தபின்
னுடலினுட்படுதன்மையுணர்த்தினன். (உங)

தன்னுரந்தருசானுவினுபியின்
மின்னிலங்குமிடற்றினினெற்றியின்
சென்னிமீதிற்செறிபடலந்தெறப்
பன்னுபாசுபதத்தையுணர்த்தினன். (உச)

உணர்ந்துமண்புனறீவளியொண்விசும்
பிணைந்தமேனியுளேகபுருடனை
யணங்கிலாவெளிக்கப்புறத்தப்புற
மணங்கொள்காலுடன்வாங்கியிருத்தினன். (உரு)

இருத்துநாபியின்கீழ்நின்றிலங்கழ
றிருத்துகாலுடன்சேரவெழுப்பியுள்
ளுருத்தபோதிலுடலமனற்படு
புரிக்குநேரெனப்போதனிருந்தனன். (உசு)

இருந்தவானத்திலங்கிதழாயிரம்
விரிந்தபங்கயமீதனல்வீசலுஞ்
சொரிந்துவீழமுதத்துளிதோய்தலாற்
சிவந்தமேனிசிவதனுவாக்கினன். (உஎ)

ஆக்குபன்னிரண்டங்குலத்தப்புறம்
போக்குவானிற்புறத்திடுமாவியை

நீக்கிமீட்டொருநெஞ்செனுமெட்டிதழ்
வீக்குபங்கயமீதிலிருத்தினுன். (உஅ)

இரும்பினிட்டவிரசக்குளிகையாற்
றிரும்பவங்கதுசெம்பொனதாவபோ
லரும்புசீவன்சிவத்தொடணைத்தபின்
றிரும்பிடாதவிளக்கிற்றுலங்கினுன். (உகூ)

நாலுமாறுநலந்தருபததுமே
டேலுமாறிரண்டெண்ணிரண்டோரிரண்
டாலமுண்டவர்க்கன்புறுமெல்லிதழ்க்
கோலமண்டபங்கொண்டுலாவினுன். (௩0)

குலாவுனிம்பதொடொன்றெனக்கூறிய
நிலாவுமக்கரமேவுநியாசமுங்
கலாநியாசமுஞ்செய்திடுகாட்சியான்
மலாதிதீபத்திருளின்மருண்டவே. (௩க)

உண்டெனும்பிரமங்களொரைந்தினுற்
* றெண்டபங்கியுஞ்செய்துவலக்கரத்
தண்டர்நாயகற்காசனமிட்டபின்
முண்டகத்தலைவாசலைமூடினுன். (௩உ)

மூடினுனிருகண்ணைமுகிழ்த்துளே
நாடினுன்சிவஞானவிழிச்சுடர்
வீடினுன்வினையாவும்விருப்புறக்
கூடினுனரன்குஞ்சிதபாதமே. (௩௩)

பாதியார்மதியார்தம்பதியினிற்
சோதியார்பசுமேயத்தொடர்ந்தபின்
வாதியாரிபொசம்வழுவலா
லாதியார்பசுவாகத்திகழுவான். (௩௪)

கழுவுநீரிற்கலந்திடுமுப்பென
வொழுகுபாலினுடன்புனல்புக்கென
வெழுதுமோவியமென்னவிருந்துதன்
வழுவிலாவிபரத்தில்வணங்கினுன். (௩௫)

வணங்கு † ரேணுவடிவுமிலாதரு
ளிணங்குநுண்பரமாணுவிலெய்திய

* தெண்டபங்கி - ஓர்வகைநியாசம்.
† இரேணு - அணு.

வணங்கிலாவியைமீளவழைத்தன
னுணங்குநீண்மடையூர்புனலொப்பவே. (௩௬)

வேதியன்சிவன்மெல்லடிமேல்விடுஞ்
சோதிமீளவிழித்துச்சுடர்முகப்
போதினோக்கிவினையிருள்போக்கியக்
காதிசூரியவர்ச்சனைபண்ணினான். (௩௭)

நாலுமைந்துநயந்தபதத்தினுட்
பாலுடன்றயிர்நெய்பசுநீர்மய
மேலமாவொடுநெல்லி * யிரச்னி
யாலமுண்டவர்க்காமெனவைத்தனன். (௩௮)

நன்பதத்திடுசாலிநவபதத்
தொன்பதிற்றிகழ்சத்தியுடன்பர
னன்புறுத்தியகும்பமயன்றிரு
முன்புவைத்தனன்முண்டகவாசனன். (௩௯)

வாசலிற்புறமன்னி † யவனிகை
யாசறுக்குமகோரத்தடக்கிமேல்
வீசுபத்திவிமலசுவாகுவை
நேசமுற்றுநிறுத்தியுள்ளாயினான். (௪௦)

ஆயபாசுபதமெனுமந்திரந்
தூயவாசற்றுலங்கநிறுத்தியுட்
போயரன்புடைவாத்துபுருடனை
நேயமாகவெழுப்பிநிறுத்தினான். (௪௧)

நாலுமாமுகனைம்முகநாதனை
யாலகாலமடக்கியகண்டனை
கோலமாதொடுகூடியகண்டனைக்
காலகாலனைக்கண்டுவணங்கினான். (௪௨)

வணங்குநாயகிமத்திமைகுண்டலி
இணங்குமுச்சுடர்க்கோணமதேர்ந்திய
வணங்குவிந்துவினாதமரும்பிய
குணங்கொண்மேனிக்கொழுந்தினைநோக்கினான். (௪௩)

---

* இரசனி - மஞ்சள்.

† அவனிகை - இடுதிரை.

நாலுவேதநவிற்று * மைஞ்சுத்தியு
ளேலுமந்திரசுத்திசெய்தீசன்முன்
கோலுமர்ச்சனைசெய்துமைகோன்முடி
வாலவேதன்புதுமலர்வைத்தனன். (௪௪)

வைத்தவாடைமலர்ப்பணிநீக்கிமெய்ச்
சுத்தமானசுகந்தநன்னீர்கர
முய்த்தகொள்கையதுட்படவாங்கியெண்
ணத்தனுக்கபிடேகமயன்செய்தான். (௪௫)

செய்யதாமரைச்செம்முகமைந்துள
வையனுக்கபிடேகமருச்சனை
துய்யபோசனமுடகந்தோத்திர
முய்யவான்முறையுய்த்துமுன்னின்றனன். (௪௬)

நின்றபானுவுஞ்சோமனுநேர்செலா
தொன்றுகாலமுணர்ந்துரவோனுளந்
துன்றுதெய்வச்சுடரையெழுப்பியாங்
கன்றிலிங்கத்தமரமலர்த்தினன். (௪௭)

மலர்ந்தபூவும்புனலுமலர்க்கையா
லலர்ந்தபாதத்தருக்கியஞ்செய்துபின்
னிலங்குதாபனகும்பமெடுத்தரன்
றுலங்குமாமுடிதோயவிடுத்தனன். (௪௮)

விடுத்தமென்குசைசென்னியின்மீதுவைத்
தெடுத்துமஞ்சனமாட்டுதலெம்பிரான்
முடித்தவேணிமுடியவிழ்ந்தேநுனி
பொடித்தகங்கைபொழிபுனன்மானுமால். (௪௯)

மானுநன்பெருமாதுமுடன்புன
னனமாடுதல்கண்டுநடுங்கயன்
றூனுமங்கொருசத்தியுருக்கொடு
மோனவேதமுறைமுறையோதினன். (௫0)

நானமஞ்சனமிவ்வகைநல்கினன்
ஞானநன்சிவனார்க்கினிதம்பரங்
கானமென்களபங்கமழ்குங்குமந்
தானணிந்துபைந்தாமமுஞ்சாத்தினன். (௫௧)

---

* ஐஞ்சுத்தியாவன - ஆன்மசுத்தி, ஸ்தானசுத்தி, திரவியசுத்தி, இலிங்கசுத்தி, மந்திரசுத்தி.

சாத்திரத்தின்றலைவருமந்திர
மூர்த்தியென்னுமுறைமைவழாமலே
யேத்தியேத்தியிறைஞ்சியிறைஞ்சியே
பாத்தியாசமனீயம்பயிற்றினன். (௫௨)

பயின்றபங்கொருபாதிபசுமையு
மியன்றபாதியிலங்கியசெம்மையும்
வியன்றருங்களமீதிற்கருமையு
முயன்றவர்க்கருள்கூருமுகங்களும். (௫௩)

முகத்தில்வெண்புன்முறுவலுமாதவர்
மகத்தில்வேழமுரித்தமலர்க்கையு
மகத்திலாளுக்கருள்புரிநோக்கமுஞ்
சகத்திலாருயிர்தாங்குஞ்சரணமும். (௫௪)

சரணமென்றவர்தங்கள்வினையனற்
றிரணமாகத்தெறுந்திருநேயமும்
புரணநீறும்புயங்கப்புயங்களும்
பிரணவத்திற்பிறங்குநிலைமையும். (௫௫)

பிறந்திறந்துழலாதபெருமையாற்
சிறந்தமெய்ச்சிவலிங்கசிரோதய
நிறைந்துதோன்றலுங்கண்டுநெடுந்தகை
யறைந்தபைந்தருவாகவேநின்றனன். (௫௬)

நின்றுகண்ணிணைநீர்ததும்பப்புறஞ்
சென்றுரோமஞ்சிலிர்த்துவசந்தர
வொன்றுமெண்ணிலனுற்றிலனேதில
னன்றுவேதன்பரவசமாயினன். (௫௭)

ஆயகாலையிலங்குளவந்தணர்
சேயவெண்மருமிங்கிவன்செய்கைகண்
டோய்விலாமறையோதுமுழக்கினாற்
போயதோர்கலிப்பொங்கெழிலோதையே. (௫௮)

ஓதுகின்றவுருத்திரர்பன்னொரு
பேதமானவர்பேணுங்கரங்களிற்
றீதிலாமழைபோலவர்சிந்திய
போதுவெற்பலர்பூத்ததெனத்தகும். (௫௯)

தகும்பராபரைதன்னுடனொன்றியு
மிருந்தகாரணமாய்வருமெய்யர்முன்

புகுந்துவானவர்போற்றுமுழக்கொலி
திகந்தரங்களடங்கலுஞ்சென்றன. (௬௦)

நத்திலங்குநறுங்குழைவார்சடை
முத்தர்முன்பணிமாறுமுழக்கினாற்
பைத்தலைப்பெருநாகர்பரப்பினு
மெய்த்தலத்துமிருந்தவரெய்தினர். (௬௧)

நாரதாதிபர்நல்குஞ்சுராதிபர்
மாரதாதிபர்மன்னுந்தராதிப
ராரதாதிபரானகணாதிபர்
சாரதாதிபர்சந்நிதிமேயினர். (௬௨)

மேயபங்கமுத்தனவெண்ணகை
பேரியநுண்ணிடைப்பொங்கழகாடவிச்
சேயவானனச்செங்கட்டுவரிதழ்த்
தூயரம்பையர்துன்னியிறைஞ்சினர். (௬௩)

இறைஞ்சியிவ்வகையாவருமேத்தலு
நிறஞ்செய்நான்முகனேக்கிநிமிர்ந்தெழீஇ
யறிஞ்செய்யீசனணிந்தவையுண்டவை
மறஞ்செய்சண்டனுக்காக்கினன்வன்மையான். (௬௪)

ஆக்குநாழிகையேழரையாகநாட்
போக்குசாமம்புகுந்திடுமெட்டினுங்
காக்குலாவுகயிலையிற்பூசனை
நீக்கிடாதுநிகழ்த்தினனுங்கவன். (௬௫)

அங்கனான்முகனானனச்செவ்விதழ்த்
துங்கவேதச்சுருதிமுழக்கலாற்
பங்கயத்துட்படியுஞ்சுரும்பினம்
பொங்குகீதச்சுருதியைப்போலுமே. (௬௬)

மேனிலாவும்விரிகதிர்ப்பானுவு
ஞானநாதன்றிருமுகநண்ணலா
லானவேதற்கலந்தலராமலர்க்
கானமாயினகண்ணுங்கரங்களும். (௬௭)

கரங்களிற்செறிகண்களின்வாய்களி
னுரங்களிற்சரணங்களினுற்றறி
சிரங்களிற்கடன்செய்வனசெய்தபின்
புரங்களிற்பொருமீசனைப்போற்றினன். (௬௮)

வேறு.

போற்றியும்விசுவகன்மன்புகுந்தரன்புண்டரீகக்
காற்றுணைவணங்கிக்கையாற்கமலனைத்தழுவிவாழ்த்தி
நீற்றனைவிடைகொண்டங்கனீங்கியுத்தரபாற்போந்தான்
வேற்றுளோர்விண்ணோர்யாருமகன்றுதம்வீடுகண்டார். (௬௯)

கண்டநஞ்சுடையகோவையருச்சித்தகமலனுந்திக்
குண்டலிக்கனலைமூட்டிக்கொடும்பகைச்சமிதைகூட்டி
யண்டருஞானநெய்யாலாகுதிமகஞ்செய்தந்தத்
துண்டவான்மாய்கைத்தர்ப்பைசுட்டவன்றிலகமிட்டான். (௭0)

இடத்தினும்வலத்துமாகவியங்குவார்விந்துசூழ
மடைத்தலைவாசலிட்டமணிவிளக்கிருபாலோங்க
கடைத்தெருநடுவேயந்தக்கறைமிடற்றண்ணலார்பா
னடத்தினன்விழாவேகாண்பானன்முகனெந்நாளும். (௭௧)

எந்தையாற்கொருநாற்சென்னியிருநான்குசெங்கையெண்க
ணந்தணன்காலையுச்சியந்தியோடத்தயாமஞ்
சந்திகண்முடித்துப்பூசைசமைக்குநாடன்னிலோர்நாள்
புந்தியுளடங்காதோங்கும்பொங்கியதுயரமானான். (௭௨)

ஆனவன்றுயரநோக்கியரனெழுந்தருளியன்பான்
மானவெந்துயரம்யாதுசொல்கெனமறையோன்சொல்வான்
றேனிலாமலர்போற்பூவின்றிரளிலாப்புனல்போல்வைய
மூனிலாவுயிர்களில்லாதிருப்பதென்னுடையாயென்றான். (௭௩)

வேறு.

என்றுதன்கரமெட்டுங்குவித்தெதிர்
நின்றகாலைநிலாமுறுவற்செயா
நன்றுபல்லுயிர்யாவுநீநாட்டென
வன்றுகூறினனாறணிவேணியான். (௭௪)

ஆறுபத்திரண்டோடாறைந்துமாறுமாய்க்
கூறுதத்துவமென்னுங்குறிப்பெலா
மேறுமேறுடையான்றனதேவலால்
வீறுபோதவிதித்தனனம்புயன். (௭௫)

அம்புவிக்கியலைம்பொறியின்குண
நம்புநீர்க்கொருநாலுகனற்குமூன்
றிம்பர்காலுக்கிரண்டுவெளிக்கொரு
தம்பநன்பொறியாகத்தரித்தனன். (௭௬)

தரித்ததாளிணைசானுவுநாபியுந்
திருத்துகண்டமுநெற்றியுஞ்சென்னியும்
விர்ததமணபுனற்வளமணமணனப
பொருத்துமேனிபொலியவமைத்தனன். (எஎ)

நனனிலஞ்சதுரச்சிரநாமுக்ாக
கன்னவில்லுக்கனறிரியச்சிர
மின்னும்வாயுவிலங்கறுகோணம்வா
னன்னவட்டம்படைத்துலகாக்கினன். (எஅ)

நன்சரிப்பினடப்பனபற்பல
ப்ன்சரிப்பிற்பறப்பன்பற்பல
வுன்சரிப்பினிலூர்வனபற்பல
வின்சரிப்பற்றிருப்பனபற்பல. (எகூ)

பலவுமிந்தப்படிபடியெங்கணுங்
குலவுமானிடமும்பலகூட்டமு
மிலகுவித்தங்கிரணியனுதியாஞ்
சிலவரக்காதிரனுமுண்டாக்கினன். (அ0)

ஆக்கினேனிவ்வுலகிற்சராசரம்
போக்கினேனென்பிறவிப்புலையெலாந்
தேக்கினேன்சிவஞானமெனச்சிவன்
றாக்குபாதந்தொழுதுமுன்சொல்லினன். (அக)

சொல்லிமீளத்தொழுதுவிழுந்தெழுந்
தல்லிநாணமலரோனினிதைந்துக
நல்லபூசனைசெய்திருநால்வருட்
புல்லியோகச்சமாதிபுகுந்தனன். (அஉ)

புகுதுமிவ்வகைபுண்டரிகத்தவர்
தொகுதியொன்பதுபேருந்துதிசெய
வுகமொரைந்துமொழிந்தபினீரைந்து
திகிரிமாதவர்செய்தனர்பூசையே. (அங)

வேறு.

ஏதமிலாவாதியில்விட்டுணுவுந்தாமோதரனுமிலங்குசங்க
மூதியவாய்நாரணனுங்கேசவனுஞ்சரோருகக்கண்ணுடையகோவு
மாதவஞ்செய்யச்சுதனுஞ்சக்கரபாணியும்வாயுதேவமாலும்
போதுபதுமநாபனுமக்கிருட்டினனுமெனப்பதின்மர்பூசித்தாரே. (அச)

பூசனைசெய்தண்டசமாமுகத்திலரன்பணிவிடையாற்புவியுள்ளோர்க்கு
தேசுநோமூப்புமுதற்செனிப்பித்தார்திமிடமாய்ச்செப்புங்காலம் [த்

பேசுநலம்பிறப்பித்தாரளவிந்தம்பிறக்குமீறு
காஞ்ஞியில்விதித்தாரக்கிரவுகத்திற்பிரளயகீர்காட்டினரோ. (௬௫)

காட்டருஞ்சீர்க் கிரோதவுகந் தன்னின்முன்னாள் விசுவசிட்டி கையாற் றந்த, வாட்டகுவர் நலியாம லியந்திரஞ்செய் கங்கணங்கள் வானோர் தோளிற், பூட்டியது மவுணரதைப் பழித்துதழீ பெறிந்ததுவும் புலவோ ருய்யத், தீட்டருமால் மீனுருவாய்ப் புகுந்தடுத்துக் கொடுத்ததுவுந் தெரிந்து ரைப்பாம். (௬௬)

அர்ச்சனைவிதிச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உளஙு.

ஐந்தாவது

மச்சாவதாரச்சருக்கம்.

உரைசிறந்த தென்கயிலைப் பெருமானை யுருத்திரர்ஙன் னொருவர் வேதர், நிரைசிறந்த வொன்பதின்மர் திருமாலோர் பதின்மரிவர் நீங்கா ராக, வரைசிறந்த திரிகோணத் தொவ்வொருகோ ணந்தமக்கு வாழ்வாய்க் கொண்டு, விரைசிறந்த மலர்தூவி யருச்சித்துச் சிவபோகம் விளங்குங் காலம். (க)

விளங்குமலர் விசுவசிட்டி படைத்தவறு பத்துநால் வெள்ளஞ் சேனை, துளங்கலிலா வவுணருக்கு ளிரணியனென் றொருதலைவன் சூழு மாழிக், களங்கவிட மடக்குமவன் வடகயிலை யடைந்துதவங் கடிது செய்தா, னுளங்குளிர்ந்து சிவனவனுக் களித்தவர மிவ்வளவென் றுரைக்க லாற்றா. (உ)

ஆற்றலினும் பகைவர்தம்மா லடுபடையான் மறலிதன்னா லாவி போகான், போற்றுமகத் தும்புறத்து மிரவுபக லிரண்டுமுயிர் போக்கிற் போகான், கூற்றுமவன் பேர்கேட்கிற் குலைகுலையு நடக்கிலண்டகூடஞ் சாயு, மூற்றுமுகி லேழுமெறி கடலேழுங் குடங்கையிற்கொண் டொருக்கா லுண்பான். (ஙு)

பானுவுஞ்சந்திரபதமுஞ்சுரர்பதமுமவன்பதத்திற்பணியாதில்லை
வானவர்கோன்முதலுலகபாலரவன்வாயிலுட்போய்வணங்காரில்லை
நானிலமுமிரணியனேநமோவென்றுநாவில்லைநாரணன்பே
ரோநமசிவாயமெனச்சிவன்பேருமவன்காலத்துரைப்பாரில்லை. (ச)

இல்லமுமில்வனிதையருஞ்செல்வமுந்தந்திருநாடுமிமையோர்க்கில்லை
யுல்லமையாற்பேருலகமீரேழுமொருதனியேவலிதிணுண்டான்
தெல்லைமகராட்டிரமாம்பதியிலரசிருந்தமுடிசூடிவாழ்ந்தான்
பல்லவுணவெள்ளமொராயிரங்கோடியவன்படையாப்பரவாநிற்கும். ()

நிற்பாருத்தியசமையமெத்தனையுந்தத்தமதுநியமநீத்துக்
கற்பனவுங்கேட்பனவுமிவனுமமென்னிலென்னகழறுகிற்பேம்
நற்புவனத்திப்படியாயிரகோடிவருடமுறநடத்தியாண்மை
கற்பமெனமுப்பதமுக்கோடிதேவரையுங்கலக்கஞ்செய்தான். (௬)

செய்தவத்தை நலிகின்ற வவுணருக்கென் செய்வதெனத் தெரிந்து வேதம், பெய்ததொரு மந்திரத்தைத் தகட்டெழுதிக் கங்கணப் பொற்பெரும்பூணாக்கிக், கைதரித்து வசீகரமீ தெனநினைந்து வெருவாதகளிப்பாராகி, யெய்தியிரணியனையும்வந் திறைஞ்சாமற் புறஞ்சிலநா ளிருந்தார் விண்ணோர். (௭)

இருந்தபொழு தவருலகத் தேகியிவர் கைக்குமுன்னு ளில்லா தின்னும், பொருந்தியதீ தென்னென்று தானவரும் வானவரைப் புகைந்து நோக்கித், திருந்துகரம் பிடித்தமரர் தங்கரத்திற கங்கணத்தைச சினத்தால் வாங்கி, விரிந்தகட லிடைமேகம் பொன்மழைக்கால் விடுவதென விடுத்தார் மிக்கோர். (௮)

மிக்கவிருசுடரிழந்தவானமெனவேந்திழந்தவியனுடென்னத்
தொக்ககரமொன்றுமருப்பிரண்டுமதமூன்றிழந்ததும்பியென்னப்
புக்கதிருவிழந்தமடவாரென்னச்சிறகிழந்தபுள்ளேயென்னச [ர்.
செக்கர்விழிமுத்தந்திரக்கங்கணங்களிழந்துள்ளந்திகைத்தார் விண்ணோ

வணனுடைய விமையவரு முனிவரரு மவுணருக்கு விறலை யீந்தா, ரெண்ணுடைய துயரைநமக் காக்கினன் சிவனென்று லெவரை நோவேம், கண்ணுடைய திருமேனிக் கோமானே டெழுந்துதென் கயிலைக் கண்ணோர், பெண்ணுடைய பாகனைப்போய்த் தொழவிசும்பு வழியாகப் பெயர்வ தானார். (௧௦)

ஆனதருநீழலினிதிருக்குமமரர்களுமமரர்கோவு
மேனுளில்விடங்கொதிப்பவடகயிலைதனிலடைந்தவெருவல்போலச
சேனுதிபதிபவுணர்தனக்கொதுங்கித்தென்கயிலைச்சிகரத்தூடே
நானுடுஞ்சதர்மன்றயின்றலைநின்றுளிருந்ததிசைநோக்கிவந்தார். (௧௧)

நோக்கமொரு மூன்றுடைய தென்கயிலைப் பெருமானை நோக்கி யோக, பாக்கியத்து ளினிதிருப்பார் முக்கோணப் பேரவைக்குட் பணிந்து வாநினர், காக்குமுத வுருத்திரர்காள் விரிஞ்சர்காள் முகுந்தர்

காள கனகன் சேனை, யாக்குதய ராற்றுது தவமிழந்தேந் திருவிழக்தே மந்தோ வென்றார். (கஉ)

என்றமொழியினைவினவியீனைந்துமுகுந்தருக்குளிரங்கிக்கூர்வான்
மன்றலந்தார்க்கேசவனும்வாசவனையமைத்தமலர்க்கரத்தணுகித்
துன்றியநந்திருநாடுந்தருவுமயிராவதமுந்தோற்றவாறும் [சென்றான்.
வென்றியவுணருக்கிடைந்திவ் வெற்படைந்த வாறெனன்கொல்விளம்பு

விளம்புமெனப்புரந்தரனுந்திகந்தரங்கள்பெரிதளந்துவிரிந்தசெவ்வித்
தளம்பயிலுங்கமலமலர்ச்சரணமிசைவிழுந்திறைஞ்சித்தருணநீல
வளங்கவினுமுடன்முழுதுமுத்தரும்பிற்றென்னவிழிவழிநீர்மல்கத்
துளங்குமிகுமயவருழக்குந்துயர்சிறிதுகேசவன்முன்சொல்வதானன்.

ஆனதபெருந்தருவுஞ்சுரபியுஞ்சிந்தாமணியுமரமபைமாரும்
வானுடுமிரணியற்குவாழ்வாகமனத்துயரம்வானோர்க்காக
மேனாளில்விதித்தபடியித்தனைநாளனுபவித்தேம்விடியுங்காலந்
தானுவதிலையிதற்கென்செய்வேமெனப்பார்த்தேஞ்சதுர்வேதங்கள். ()

வேதமதிற் சமரத்தி மந்திரமென் றோருதவி விளம்பிற் றந்தப், போதனையை வசீகரமாய்த் தகட்டெழுதிக் கங்கணமாய்ப் புயத்திற் பூண்டோந், தீதவுணர் கண்டெமக்குச் சிறுசிகையும் புரிநூலு மல்லாற் செங்கைக், கீதணியும் வஞ்சனையென் னெனப்பறித்து மறிகடற்க ணெறிந்தா ரென்றான். (கசு)

என்றுதனைப் பணிமதியைக் கனலிதன்னை யிபந்தன்னை யிஞ்சி மூன்றைக், குன்றுதனை முயலகனை நெரித்துவளைத் தெரித்துரித்துக் குறைத்துத் தேய்த்துத், துன்றியபல் லொடித்திகழ்ந்த, தக்கனையுந் தலைதுணித்த தொல்லோன் பாத, மன்றியொரு துணையில்லை யென்ற டைக்க லம்புக்கே மாழித் தேவே. (சஎ)

தேவருலகிருந்தாலுமிறந்தாலுமிரணியனுந்தீயோன்சேனை
யேவுமுரணிருந்தாலுமிறந்தாலுஞ்சிவனருளென்றிரங்கிமாயோன்
பூவடியில்விழுந்தெழுந்தவாசவனைக்கேசவனும்புல்லியுங்கள் [தான்.
மேவுதுயர்தவிரும்வகையெம்பெருமாற்குரைப்பனென விரைந்துபோந்

போந்தரனைத் தொழுதிறைஞ்சி யவுணரொலாம் புலவரைமுன் பொருத வாறும், காந்துசுரர் வலிக்கொதுங்கிச் சுரர்சுருதிக் கங்கணங்கை தரித்த வாறு, மேந்துமவர் கங்கணத்தைத் தானவர்போய்ப் பறித்துததி யெறிந்த வாறு, மோய்ந்துதுய ருழந்தமர ரீங்குவந்த வாறும்விரித் துரைத்தான் மாயோன். (கக)

மாட்டவனைநோக்கிப்புன்முறுவலொடுந்தென்கயிலைமலையெங்கோமான்
நீயவனுணருக்கின்னஞ்சிலநாட்பின்பொறுதியின்றுதேவர்க்கெல்லாம்
மேயமணிக்கங்கணத்தைமீனுருவாய்ப்பிறந்துகடல்விளைவிற்றேடி
நீயுதவுகெனவவனுந்திருவுளத்தின்படிபுரிவனிமலவென்றான். (௨0)

என்றதிரு மான்மொழியு மெம்பெருமான் றிருவாக்கு மிமையோர் கேட்டார், பொன்றியது தானவர்தம் பூசலுமெம் புலம்புதலும் போயிற் றென்று, ரன்றரனைத் திருமுன்னர்த் தொழுதுவிழுந் தெழுந்து நட் டமாடிப் பாடி, மன்றலம்பூ மாரிசொரிந் தரகரசங் கரவெனுஞ்சொல் வாய ரானார். (௨௧)

நாரணனக் காலத்தன் பணிவிடையென் றலைமீது நாட்டி யென்று, பூரணனை விடைகொண்டு வானவரை யஞ்சலெனப் புகன்று புல்லிப், பேரணங்கைப் பிரியாத பெருமான்றன் கயிலையினைப் பிரிந்து தெய்வக், காரிணங்கு வடிவமொழித் தொருமீனும் வடிவெடுத்துக் கடலுட் புக்கா. (௨௨)

வேறு.

புக்கமீனமைக்கடலிடைச்செல்வதுபுவனத்
திக்குநான்கினுமூழிநாட்டிளைத்தபேராழி
மிக்கமூதண்டமிதப்பதேயொப்பலால்வேறு
யன். (௨௩)

போனசெல்கதித்திவலையிற்பொடிப்பனசிலமீன்
வானமொக்குளோடோடிவான்மறிவனசிலமீ
னனநீரெற்றிதிரையினுலழியுமீன்பலவால். (௨௪)

வாலுகக்கரைததும்பியதிரைப்புறம்வழிய
வோலமிட்டலைந்துதுறைசிதறினவுததி
சாலுமத்திருமால்கடைமத்திடைத்தலைநாட்
பாலலைக்கடல்கலங்கியதென்னலாம்பகரின். (௨௫)

இன்னமீனென்றுதிரிதரமகரமீனினங்கள்
சின்னமாயினதிமிங்கிலஞ்சிதறினதிசைபோய்
முன்னைமூழியிற்கடையுகத்தெம்பிரான்முனிய
வன்னநாளண்டம்பட்டதுபட்டதவ்வளக்கர். (௨௬)

அளவிறந்தநீர்த்திவலைகளெழுந்தெழுந்தகிலம்
வளருமூதண்டமனைத்தையுநனைத்தனவானோ

ருளமகிழ்ந்தனருய்ந்தனமென்றனருலகந்
துளருமோவிதனுலெனச்சலிப்புமாயினரால். (உஎ)

ஆய்ப்புனலொழிவறச்சுழித்தலையெறிந்து
தூயவிண்ணளவும்பாந்தார்த்ததுதொல்லை
மாயன்றன்னிடைநடந்தனனென்பதோர்மகிழ்வா
லேயவக்கடல்கிடந்ததாங்கெழுந்ததேயெனலாய். (உஅ)

எழுந்தமீனதுமேலதோவதனுடனெழுந்த
செழுந்திரைத்திரண்மேலதோவெனத்திரிதரலா
லழுந்துமக்கடல்சிதறியநுரைவிரைந்தணுகக்
கொழுந்திசைப்பெருவரையெலாங்கயிலையாங்கூறின். (உகூ)

இனவளைச்சங்கம்பற்பலகோடிநொந்திரங்கிச்
சினைவயிற்றிடையுடைந்தறக்கதறியசெய்கை
யனையவக்கண்ணன்றனதுசங்கிருப்பமீனுகிக்
கனைகடற்சங்கமுழுவதுமூதுதல்கடுக்கும். (௩0)

கடுங்கதிக்கொடுவால்விசைத்தோடலுங்கலங்கிக்
கெடுங்கடற்பதினுயிரம்யோசனைகிழியுந்
துடங்குமத்தனிமீனதுகுதித்தலுந்துள்ங்கி
யடுங்கனற்சுடர்வடவையுமவிபடுமதனுல். (௩க)

நாலுதிக்கினுமியக்கருநயந்தகின்னரரு
மேலுதிக்குமச்சோமசூரியருமவிண்ணுடுவுஞ்
சாலுமத்தனிமீன்விளையாடலுந்ததும்பி
யாலுமப்புனற்கஞ்சிப்போய்மேருமீதடைவார். (௩உ)

அடையவாரிதியளறுபட்டதுபகிரண்ட
முடையவப்பெருமுழக்கினுல்வெடிபட்டதுலகத்
திடையுளோர்செவிசெவிடுபட்டதுதொழுதெவரும்
விடையுளானருட்கன்னதோவிதுவெனவியந்தார். (௩௩)

தாரணித்தலைமகள்தலையாதலாற்சலதி
பேரணித்தனகாதலனுதலாற்பெருமீ
னேரணித்தவளுடைகுலைத்திடுவதேயென்னச்
சீரணித்தபேரலைகுலைபடப்புடைதிரியும். (௩௪)

திரியவாட்சுறவினம்பலசிதறினவொருபா
லரியகூர்மம்பலதொலைந்தலமருமொருபாற்
பரியமால்வளைக்குழாங்கள்வேர்பறிந்திடுமொருபா
லிரியல்போய்க்கடன்முதலைகளெறிபடுமொருபால். (௩௫)

டாலலைப்பள்ளியானொருமீனெனப்பாய்ந்தாற்
சாலவக்கடல்படும்பதைப்பார்சொலத்தகையார்.
வேலையிற்பண்டுவிழுங்கியகங்கணமீண்டக்
காலையிற்பலமீன்களுமுமிழ்ந்தனகடிதே. (௩௬)

கடிதுமாயவற்கடியுறைபோலவக்கடன்மீ
னொடிதுமிழ்ந்ததுநிலத்திடைக்கிடந்ததுநிலையா
மடுமிதந்ததுமணற்சுரிமறைத்ததுமாக
முடிவில்கங்கணம்யாவையுமெடுத்ததுமுகத்தால். (௩௭)

எடுத்தகங்கணநோக்கினர்மையவரெவரும்
பொடித்ததங்கவருரோமங்கள்புளகித்துதங்கந்
துடித்ததோள்வலஞ்சொரிந்தனகைம்மலர்தோண்மீ
னடுத்துமீண்டதுகண்டதுதென்கயிலாயம். (௩௮)

ஆயதென்கயிலாயத்தின்றென்புறமணுகி
மாயம்சசமாமுடலையக்கடல்வழிவைத்துத்
தூயதன்னுருக்கொண்டரன்சந்நிதிதுன்னிச்
சேயகங்கணம்முன்வைத்துவணங்கினன்றிருமால். (௩௯)

திருவருட்கணுநோக்கிநீயிவ்வுழிசெனித்த
மருவுமீனுடலிம்மலைக்கேறவோர்மலையா
யருகுவேலையிற்கிடத்தலாற்புவிக்குநன்றளித்தாய்
பொருவிலாச்சுராருலகமுங்காத்தனைபுகழோய். (௪0)

புகழுமுந்தேவர்தங்கங்கணங்கொடுத்திபோயென்னத்
திகழுமெம்பிரான்முகுந்தனையேவினன்றிரண்டு
நிகழும்வானவர்க்கீந்தனன்முறைமுறைநெஞ்ச
மகிழுந்தன்மையர்வாழ்த்தினர்சதுமறைவழாமல். (௪௧)

மல்குமச்சமாங்கேசவன்பெயரினம்மலைக்குப்
புல்குமற்சேச்சுரமெனத்திருப்பெயர்புகன்று
ரல்குந்தானவுராண்மையினினியுங்களாண்மை
பல்கும்போதிரென்றரன்சொலவிடைகொண்டுபணிந்தார். (௪௨)

பணிந்துகேசவற்புகழ்ந்தனர்பராசத்திவடிவாய்த்
தணிந்தவாழ்விற்பவானியாய்மோகத்தாற்பணியாற்
கணிந்ததுர்க்கையாய்க்குரோதத்தாற்காளியாயடலாற்
றுணிந்தவிண்டுவாய்நின்றவுன்பெருமையார்துதிப்பார். (௪௩)

பாரும்வானமுங்காப்பதுன்பாரமாகையினாற்
சேருமெம்மையுங்காத்தலுன்கடன்கொலாந்திறலோய்

வாரமெம்முனிமறு தருளெனகனிவழுத்தி
வீரவாசவன்முதலினோர்விடைகொண்டுமீண்டார். (சச)

மீண்டகாலையிலவுணர்மேல்விண்ணவர்வெகுண்டார்
பூண்டபூசலுக்கவுணருமெதிர்த்தனர்பொருதா
ரீண்டுவானவர்துரந்தனர்தானவரிரிந்தார்
காண்டருஞ்சுரர்தம்பதிபுகுந்தனர்களிப்பால். (சரு)

களித்தரம்பையர்திருநடம்புரிந்தனர்கடல்வாய்க்
குளித்தகங்கணமணிந்தனரவுணர்தங்குலத்தா
லொளித்தவின்பமும்வெளிப்படத்துன்பமுமொழிந்தா
ரளித்தகற்பகநிழலினுமமர்ந்தனரமரர். (சசு)

அமரரித்திறமிங்கினிதிருந்தனரங்கட்
குமரிபாகனைத்தொழுதுமுக்கோணமாமலையி
னிமிருமுத்தரகுகையினில்யோகத்தினின்றான்
றமரவாரிதிமீனெனத்திரிந்தவத்தலைவன். (சஎ)

தலததினித்திறந்திரோதமுந்தணந்ததுதிரோத
நலத்தின்மேவின்திங்கினியிராவணநடப்புஞ்
செலுத்தும்பூசலும்பூசையுந்தெரிசனமுத்திப்
பலத்தினாலவன்றாய்பெறும்பதவியுமுரைப்பாம். (சஅ)

மச்சாவதாரச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩உக.

ஆறாவது

## தரிசனமுத்திச்சருக்கம்.

வேறு.

உரைத்ததிரோதவுகந்தனிலிந்திரன்முதலோரும்
வரைத்தலைவைகுமகத்தியனாதிவரத்தோருங்
கருத்துடன்விஞ்சையர்கின்னரர்சித்தர்கணத்தோரு
மருத்தியினுக்கோராயிரகோடியமரர்த்தோரும். (க)

ஓரும்வேதகுலத்தொடுசுத்தோதனனோடேந்
தேருமமர்ந்தானப்பெயர்மேவுதிறற்கோவுங்

கூருமையிருகோடியரக்கர்குலத்தோரு
மீருங்கெதன்கயிலைப்பெருமானையருச்சித்தார். (உ)

சித்தமகிழ்ந்தவருக்குவரங்கள்சிவன்செய்ய
வித்தனையன்பரும்வந்தனையேசெயுமிக்காலம்
மெத்தகுணத்தொரரக்கனிராத்திரிகரனென்றான்
மெய்த்தவுமாயொரிராத்திரிகரியெனுமின்னுளே. (ங)

மின்னோநுண்ணிடைபிடியோமென்னடைவிழியோவேல்
பொன்னோமேனிபொருப்போவன்முலைபுகுமாலோன்
மன்னோவாண்முகமயிலோசாயலிம்மடமாதின்
முன்னோவலதிவள்பின்னோவழுகெனமுன்னின்றாள். (ச)

முன்னாளமுதத்துதியுதித்தாண்முளரிப்பெண்
ணன்னாள்கன்னித்திருவுருவங்கண்டன்போடு
மின்னாளென்மகண்மணமகனெவனென்றீன்றோனுந்
தொன்னாள்வடகயிலைத்தலையரனைத்தொழுதிட்டான். (ரு)

இட்டபணிப்பணியெட்டுமணிப்புயனென்சொல்வான்
மட்டவிழ்கந்தமாதனமலைமேல்வாழ்கின்றான்
விட்டசினத்தொருமாமுனிவிச்சிரவாவென்போன்
கட்டழகுன்மகள்கணவனெனத்தனிகற்பித்தான். (சு)

கற்பொருவில்லியுரைக்கவரக்கன்களிகூர்ந்து
னற்பதுமத்தாடொழுதயல்சென்றானதன்று
னிற்பதொர்மாரனையம்முனிவன்பானீயேகிப்
பொற்பமரக்தக்கன்னிகையோடுபுணர்த்தென்றான். (எ)

என்றலும்மாரனம்முனிபக்கலெழுந்தெய்தான்
கன்றிமனத்தொடுவிரதியன்விரகக்கடல்புக்கா
னன்றவ்வரக்கனும்விச்சிரவாவாச்சிரமத்திற்
சென்றடிதொழுதான்முனிவரனுசிகள்சிலசெய்தான். (அ)

செய்தவனீயிங்கணுகியதிறமென்செப்பென்னக்
கைதவமாமென்புதல்வியிராத்திரிகரியென்பா
ளெய்துமுனக்கவண்மனைவியெனத்தந்தேன்கையாற்
பெய்துதகஞ்செயவேண்டுமென்னுள்ளம்பெரிதென்றான். (கூ)

ஆனலெங்கள்பிரானருள்கற்பனையதனாலுந்
தேனார்வேள்கணையாலுமறுக்குந்திறனுண்டோ
மேனாளூழ்வினையென்பதெவற்கும்விலக்காதான்
மானார்கண்ணிமணத்துக்கம்முனிமனமுற்றான். (௧௦)

## வேறு.

உற்றமுனிமன்றெனவரக்கனெமதூர்போய்
நற்றிருமணம்புணரநல்கிடுதுமென்றான்
மற்றதுசிறப்பதெனமாதவனுமுன்னித்
தெற்றெனவெழுந்தவனுடன்கடிதுசென்றான். (கக)

சென்றுசிலைவேள்பொருதசெய்கைவலிதென்கோ
குன்றவரிவில்லிபுரிகொள்கைவலிதென்கோ
வொன்றினுமுளஞ்செலவிடாதமுனியுள்ள
மூன்றொருவரக்கன்மகட்கன்புறுவதானான். (கஉ)

ஆனனிமலர்க்கமலமன்பினிதரும்ப
ஞானமுனியைக்கொடுநிசாசரனடந்தான்
கானநதிமால்வரைகடம்பலகடந்து
மானனையகன்னியுறைமாநகர்புகுந்தான். (கங)

புகுந்தனன்மனைத்தலைப்புதுத்தரளமாடத்
துகந்துமுனியைக்கொடுபசாரமொடிருத்தித்
திகந்தரமடங்கலுமணத்தினிமைசெப்ப
மிகுந்ததொருசாரணரநேகரைவிடுத்தான். (கச)

தானவர்புகுந்தனரியக்கர்பலர்சார்ந்தார்
வானவர்குழீஇயினர்கள்மாமுனிவர்வந்தார்
கானமர்தருப்பைகொடு * காவணமியற்றி
யானதொருகாலநலமாகவுமமைத்தார். (கரு)

அமைத்ததொருகாவணமதற்கிடையொர்செம்பொ
னிமைத்தமணிவேதிகையியற்றியதன்மீதே
கமைத்தமணமாமுனிவனைக்கடிதிருத்திச்
சமைத்தமறையோர்தழல்வளர்த்தனர்ச்சடங்கால். (கசு)

காலையதிலேகிருதனுங்களிசிறந்தென்
வாலமயிலைக்கொணர்மின்மாதரெனவோத
வாலயமதற்குறுகியத்தருணமின்னைக்
கோலமுதிர்சேடியர்கள்கூடியணிசெய்தார். (கஎ)

செய்யசேலைசேலைகொடுசெக்கரின்விளக்கந்
துய்யவெளிசூழந்தெனமருங்கினிடைசூழ்ந்தார்
மையனையமேகமொடுவானுடுநிகர்ப்ப
மொய்யளகபந்திமலர்மாலிகைமுடித்தார். (கஅ)

* காவணம் - பந்தர்.

நாரணியொழுங்குகுவளைத்தலைதயங்கு
நேரொனவிழித்துணையின்மைவரிசினைத்தார்
பேருவில்வெற்பிணையெனப்பெருமுலைக்கண்
ணாரவடமிட்டகிலுமாரமுமணிந்தார். (௧௯)

ஆணிக்கமலம்வாலவெயிலெண்ணியதெனச்செம்
மணிக்கடகமங்கைதன்மலர்க்கையிலடுத்தார்
பணிக்குழைசெவிக்குழையணிந்துபதமேற்கிண்
கிணிக்குரல்சிலம்பொடுசிலம்புகிளர்வித்தார். (௨௦)

கிளர்ந்தவழகுக்கழகுசெய்கிரியையென்ன
வளர்ந்தமுலைவல்லியையிவ்வாறழகுசெய்தா
ரிளந்தளிரடித்துணைசிவப்பவெழுகென்றார்
தளர்ந்தவிடையாள்சிறிதுமெல்லநடைதந்தாள். (௨௧)

தந்தைபெரிதன்புருகநின்றுசரண்மீதே
சிந்தையின்மகிழ்ந்தவள்பணிந்தருகுசென்றா
ளந்தமுனிகண்டுவகையாழியதமர்ந்தான்
வந்தவர்முனிக்கவளைவாமமுறைவைத்தார். (௨௨)

வைத்தபொழுதங்கையிலிலைச்சுருண்மலரப்பந்
தித்தகையவேந்தியொருகாப்புமினிதிட்டுச்
சித்திரமணிக்கலையணிந்துசிலைவேளுங்
கொத்துமலர்தூவலொடுகொம்பருகிருந்தான். (௨௩)

இருத்தலுமுனக்கென்மகளின்பமணமாகக்
கருத்தொடுகொடுத்தனனெரிக்கடவுள்காண
நிருத்தனுமுரைத்தபடியென்றுநிருதன்கை
விரித்தவுதகம்பொழியவேதமுனிகொண்டான். (௨௪)

கொண்டலினமுழங்கினவலம்புரிகள்கொம்பின்
முண்டகமலர்க்கைவிரல்பற்றிமுனிசுற்றி
மண்டுமனலக்கடவுடன்னைவலம்வந்தா
னண்டருமகத்திடர்புறத்துமகிழ்வானார். (௨௫)

## வேறு.

நாரியுமுனிவனுநாரிமாருடன்
சீரியமணவறைசென்றுபுக்கனர்
காரொனுமிராத்திரிகரன்பணித்தலா
லூரினைநோக்கினரும்பர்யாவரும். (௨௬)

வருமுனிமருவினுல்மகாளைத்தந்திவ
டருகுவள்சுரர்க்கிடர்தருமுன்னேயிவர்
பிரிவதுநன்றிருள்பெருக்குமோவென
விரிகதிரவன்குடவெற்பின்மேவினன். (உஎ)

மேவியவிசசிரவாவும்வெய்யகட்
காவியுமிராத்திரிகரியுமன்பினுற்
பாவியமலரணைப்பள்ளியெய்தலு
மோவியமனையவளுறக்கமுநதினள். (உஅ)

முந்தவேளெய்கெனமொழிந்தவெம்பிரா
னந்தமாரனையினியகலென்றேவினன்
சிந்தையில்விரகமாங்குறும்புதீர்ந்தற
நிந்தையின்முனிக்குமுன்னெறிபிறந்ததே. (உகூ)

தேமருவளைதனிலரக்கன்சேர்ந்ததுங்
காமருமணமொழிக்கடனுமக்கடன்
றேமுறப்பலித்ததுந்தயின்றபேர்களு
வாமெனத்தோன்றியதவனுக்கன்றரோ. (௩0)

அன்றவளிராத்திரிகரிதன்னங்கமு
மன்றலம்பசுந்தளிர்வடிவுநோக்கலும்
வென்றியினரக்கியர்மேனியாகிமு
னன்றெனவிருந்ததுநவையுண்டாயதே. (௩க)

ஆயவளுருவுகண்டன்புநீங்கினன்
போயதுநோன்பெனப்புகைந்தெழுந்தனன்
தூயநான்மறைகளுஞ்சுடர்விளங்கிட
மேயினன்கந்தமாதனத்தின்மீதரோ. (௩உ)

மீயுயரருவிவீழ்வெற்பின்சென்னியிற்
போயொருவடதருப்புறத்திற்புற்றய
லாயிடையோகமோடமர்ந்தனனினித்
தாயிடைப்பிறந்திடாத்தவஞ்செய்தன்மையான். (௩௩)

தன்பொருட்டிருள்செய்துமுனியைத்தையல்பாற்
றின்புறப்பிரித்தவடியிலுணர்த்தியே
மின்புலம்புந்திறம்பார்ப்பவெய்யவன்
பொன்புறழ்குணதிசைப்பொருப்பிற்றோன்றினன். (௩௪)

தோன்றலுந்திசைதிசைதோறுஞ்செங்கதிர்
கான்றதுமுனிமனக்காமமாமிரு

ளென்றவன்றீயினற்பிரிந்தவாறென
வான்றமேதினியிருளனைத்தும்போயதே., (௩௫)

போயபின்ராத்திரிகரிதன்பூவணைத்
தூயகண்டுயில்பவடுணுக்கெனவிழித்
தாயிழைமுனிவனையருகிற்கண்டில
ளேயெனவணைத்தனளிரங்கியேங்கினாள். (௩௬)

நாண்மலர்ச்சுரிகுழல்சரியநல்வடி
வாண்மலர்ககண்மழைவழிந்துகால்பொரத்
தோண்மலர்த்தொடையலுந்தோடுஞ்சிந்திட
நீண்மலாக்கையிணைநெரித்துவீழ்ந்தனள். (௩௭)

வேறு.

வீழ்ந்தபொழுதெழுமுன்னேவெவ்வினையேன்பொல்லாக்கண்
சூழ்ந்துதுயிலெழுமுன்பிரிந்தெங்கேதுவள்கின்றாய்
தாழ்ந்தகுலத்தெம்மரபுன்றன்மரபுக்கொவ்வாதோ
வாழ்ந்தகுடிவாழ்க்கையுமிம்மணவறையும்போதுமோ. (௩௮)

போதொன்றுமனைமீதுன்புயந்தமியேன்புணர்ந்தறியேன்
யாதொன்றும்பலகாலும்பயிலாமுன்னிகழ்தியோ
தார்தொன்றுகுழலாரும்வேறுசிலர்தாமுளரோ
தீதொன்றுமில்லாதாற்கீதுமொருசெய்கையோ. (௩௯)

செய்யவிதழ்க்கந்திருவக்கன்னியரோதெய்வகுலத்
தையலரோவரக்கியரோவெவாதாமோதமக்கன்பால்
வெய்யதொருமாயத்தாலுனைக்கொடுபோய்விட்டார்க
ளய்யனிராத்திரிகரனுக்கவரொல்லாமஞ்சாரோ. (௪0)

அஞ்செழுத்துந்திருமார்புமகன்மார்பிறபுரிநூலுஞ்
செஞ்செவியுங்குண்டலமுஞ்சடைமுடியுந்திரடோளும்
விஞ்சுமணந்தனிலென்னைக்கடைக்கணித்தவிழிநோக்கும்
வஞ்சமறயான்காணவின்னமிங்ஙன்வருவாயோ. (௪௧)

வரும்போதப்போதென்னைமணம்புரிந்துகரம்பிடித்துத்
தரும்போதுதொடைசூட்டித்தழற்கடவுள்வலஞ்சூழ்ந்து
பெரும்போதிற்பள்ளியறைபுகுந்தளவிற்பிரிவோமென்
றிரும்போதமனத்தினினைந்தெய்தினையோவறியேனே. (௪௨)

அறியேனைத்துயிலெழுப்பியறிவித்துவெறுத்தனையேற்
சிறியேனையிவணிறுத்திச்சென்றக்காற்றீங்குண்டோ

நெறியேபின்வரவெனினுநின்மொழியான்மறப்பேனோ
மறியேந்துமெம்பெருமான்றிருவாக்குவழுவாமோ. (சங)

வழுவறவென்குலத்தாதையுனைக்குறுகிவணங்கியநா
ளழகியநின்மகட்குமணமதுசெய்வான்வரந்தந்தே
னெழுகெனநீயுரைத்தபடியிப்படிவைத்தேகுதற்கு
விழுமியமாதவற்கெல்லாம்பொய்சொல்லவிதியுண்டோ. (சச)

உண்டோவென்னுடன்முனிவுமுண்டானாலுரையாயேல்
வண்டாடுங்குழற்சேடிமடவார்க்குமுரையாயோ
வெண்டோளாற்கருச்சனைசெய்தெந்தையெனைவரம்வாங்கிக்
கொண்டோகையாற்பெற்றான்மற்றிதற்கோகோமானே. (சரு)

மானுரைப்புணராமற்றவம்புரியமதித்தனையே
லானுமலெனையுடன்கொண்டேகினையேலடியேனுங்
கானுருமலர்தந்தும்புனலளித்துங்கந்தமுடன்
றேனுருமகனியீந்தும்பிரியாமற்றிரியேனோ. (சசு)

நோற்கின்றதவங்களினுமறைமுதலானூனீங்கள்
பார்க்கின்றகல்வியினுங்கைப்பிடித்தபாவையரைச்
சீர்க்குன்றத்தனியேவைத்தொருதனியேசெய்தரும
மேற்கின்றதருமமென்றதுண்டோவந்தியம்பாயே. (சஎ)

பாயிருளென்றொருபாவிவரப்பாவியேன்றுயின்றேன்
போயதொருநினைவெறுக்கக்காரணமென்புகழோனே
சேயிருவிண்ணவருலகோவயனுலகோசிவனுலகோ
நீயிருக்குமுலகேதுயானும்வரநிகழ்த்தாயே. (சஅ)

ஏனென்றுயில்லையினியிரங்கேலென்றுயுமில்லை
நானென்றுலுய்வதில்லைநன்முனிவர்குலக்கோவே
தேனென்றுமொழியார்யான்செய்குறையுண்டென்றோ
ஆனென்றுந்தனியேயிங்குயிர்போயுமிருக்குமோ. (சகூ)

இருக்கமுடியாதுதனியென்றழுதேவிழுந்தாளம்
மருக்குழலார்பலருமேவந்தவளையெடுத்தேந்திச்
சுருக்களகமுஞ்சொருகிச்சோதிவிழிநீர்துடைத்து
நெருக்குமிளமுலைநல்லாய்நீயிரங்கலெனமொழிந்தார். (ருo)

மொழிமறையுந்தவநெறியுமுழுதுணர்ந்தமுனிதானே
பழியிதுவென்றறியானேபாவமிதென்றெண்ணானே
விழியிணைநீர்ததும்பவுனைவிடுத்திருப்பதும்முறைமைக்
கிழிவெனவுமெண்ணானேவிவ்வுலகங்கொள்ளுமோ. (ருக)

கொள்ளுகையும்பெரியோர்தங்குறையையுமியாமறிவோமோ
தெள்ளருவிப்பெருங்கிரிக்கேதவநெறிக்கேசென்றானே
வெள்ளநதிப்புனிதநீர்க்கெய்தினனோமீண்டின்ன
முள்ளுருகிவருந்தொழியானீதுயரமொழிகென்றார். (௫௨)

என்றதுமவவுரைகேட்டவிலங்கிழையுமகங்குழைந்து
சென்றகதிர்வரக்காணத்தாமரைபோற்சீரழிந்து
துன்றுமழையிலாதிரங்குதோகையும்போலத்தோகை
யன்றுமுனிசென்றவழியினைப்பார்த்தேயாங்கிருந்தாள். (௫௩)

வேறு.

இருந்துயர்கொண்டிங்கிவளிருந்தனள்
விரிந்தகந்தமாதனமிசைக்கணே
பொருந்திமாணிழற்புற்றுமூடுற
வருந்தவஞ்செய்தேயவனிருந்தனன். (௫௪)

இருநிலம்பெறும்பிரமனென்பவன்
றருமகற்கொருதனயனனவ
னருமைமெய்த்தவத்தலதுவேறுவே
றுரிமையிற்கருத்தொன்றுமெண்ணிலன். (௫௫)

இலகும்யோகமிவ்வகையிருந்துழி
யுலவுமான்மரத்தும்பாகொம்பின்மேற்
குலவுபுட்குலப்பேடைகூடவோ
ரலகிலாதபேரண்டன்வாழுமால். (௫௬)

ஆலமர்ந்தபேரண்டன்மற்றொர்நாட்
சூலமர்ந்ததன்பேடைதுய்த்திடச்
சீல்வுண்டிகொண்டின்றுசேர்வனென்
றேலமென்பெடைவிடுத்தெழுந்ததே. (௫௭)

தேடுகுன்றமுந்திசையும்வாவியுங்
காடுமெங்கணுஞ்சிறகுகால்விரித்
தோடிநீடுதூரத்தொருண்டிகண்
டாடிவாய்மடுத்தகமகிழ்ந்ததே. (௫௮)

மகிழ்ந்துடள்ளுமீள்வழிகொடேகலு
நிகழ்ந்தசெங்கதிர்க்கடவுணீள்பரி
யகழ்ந்தமேல்கடற்கரையடைந்தது
திகழ்ந்தவந்திவானிருள்சிறந்ததே. (௫௯)

தேடுமேயெனைச்சினைவயிற்றுடன்
வாடுமேவரும்வழியைநாடியென்

பேடுவீடுமேயென்றுதன்புறு
வோடியோடிமென்சிறகரோய்ந்ததே. (சு0)

ஓயுமோயுகின்றுன்னுமுன்னுமே
மாயுமாயுமவ்வழியிருட்டெலாம்
போயுமீளும்வாய்புலரும்வெய்யவன்
சாயுமோவெனக்கொடுமைசாற்றுமால். (சுக)

மாலிருடகடல்வந்துமூடலு
மாலினிற்கரிதரிதுபோவதென்
றேலமிட்டுளைந்துடலலைந்துசெஞ்

(சுஉ)

சென்றொராயிரஞ்செவ்விதழ்ப்புறந்
தின்றுதாமரைத்துய்யநாண்மல
ரொன்றின்மீதிரண்டடியுமூன்றிநின்
றன்றிராவெலாமவணிருந்ததே. (சுங)

இருள்பரந்ததிங்கண்டனின்னமும்
வருகிலன்னிதுமாயமோவெனுக்
கருவயிற்றுடன்சிறகுகால்புடைத்
திருகுபேடைநின்றுழலுமங்கரோ. (சுச)

அங்குமிங்குநாமாகநீதனித்
தெங்கணேகினையெவர்தடுத்தனர்
கங்குல்வாய்வழிகாணொதுபோய்த்
தங்கினுய்கொலோதாமதஞ்செய்தாய். (சுரு)

செய்யவாயிரைதேடிவந்தது
முய்யநான்மகிழ்ந்துண்டிருந்ததும்
வெய்யதோரிராவினைவிளைத்தது
மையகோவிதென்றழகிதாயதே. (சுசு)

ஆயபுள்ளெலாமடவியெங்கணும்
போயும்வாயிரைபுசிப்பதில்லையோ
மேயநீயும்போய்மீள்வதில்லையோ
தீயதின்றையிற்செய்வதென்கொலோ. (சுஎ)

என்னையும்மறந்தெங்கனேனுமோர்
கன்னியம்பெடைகண்டுளாய்கொலோ
வுன்னையன்றியென்னுயிரிருக்குமோ
மன்னவென்றுதன்வாயாற்றுமால். (சுஅ)

வேறு.

மாலுறுமிதயத்தோடுபேடையிவ்வருத்தங்கூர
மேலுறுதுயரோடண்டன்கமலத்துமேவுங்காலைப்
பாலுறுமதியைநீக்கிப்பனியிருளகற்றியொற்றைக்
காலுறுபரித்தேர்வீரன்குணதிசைக்கடலில்வந்தான். (சுக)

வந்ததுவெயிலின்சோதிவரிவண்டுதிரண்டுபாடக்
கந்தமென்பொகுட்டுமூடுமிதழெனுங்கதவுநீங்கப்
புந்தியின்மகிழ்ந்தகஞ்சம்போலவேரண்டனெஞ்ச
மந்தியிற்புகுந்ததுன்பமடங்கவும்போயிற்றங்கே. (எ0)

ஆங்கறிவுடையோர்தம்மோடறிவுளோர்கலந்தகாலைத்
தீங்குறிலிருபாலோர்க்குஞ்செல்வமுநலமுஞ்சேரு
மோங்குறிலிருபாலோர்க்குமாயிருந்துறைவவொன்ப
தீங்குறுகமலமேய்வேரண்டன்பாற்கண்டேமன்றே.

கண்டதுவெயிலின்சோதியேரண்டன்களிப்புவீங்கிக்
கொண்டதோருண்டிநென்னற்கதுவியகூர்வாயோடும்
புண்டரீகத்தினின்றுமெழுந்ததுபுடையில்வீசித்
தண்டலில்சிறகுச்சண்டமாருதந்தயங்கிற்றம்மா.

மாயிருஞாலமுண்டோன்மலர்ப்பதக்கலுழன்போலப்
போயதுவிசும்பினூடேவழியெதிர்புகுந்துபேடை
யேயெனவரற்றித்தேடிவயிறலைத்திரங்கிவீழ்ந்து
தீயவெந்துயரங்கூருங்காலங்குசென்றதன்றே.

சென்றதன்சேவன்மேனிதாமரைச்செவ்விப்போதின்
மன்றலம்புதியசுண்ணமணப்பமுன்வரலும்பேடை
துன்றிருளுழந்தநோயுந்துயரமுமொழிந்ததன்க
ணின்றெறிபிறக்கநோக்கிநெடிதுயிர்த்திருந்ததோர்பால்.

ஓர்புடையிருந்தபேடையூடலைக்கண்டுசேவல்
சோர்வொடுநெஞ்னன்மாலைதுயருழந்திருந்ததின்று
பேர்வறத்தமியேனின்னன்வருதலும்பிரிந்ததென்மே
லார்வம்விட்டிருந்ததென்கொலெனப் * பரிந்தணைத்ததன்றே. (எரு)

அணைத்ததும்பதைத்துப்பேடைசிறகிடையடங்காதாகி
யிணைத்தனவாயிற்சேவலினைதருவாயுந்தள்ளிப்
பணைத்தகான்மீதுகோத்தபடருகிர்க்காலுநீக்கித்
துணைத்தகண்சிவந்தகண்டஞ்சுரித்துமெய்விதிர்த்ததம்மா. (எசு)

* எனவெண்ணியணைத்ததன்றே. என்பதும் பாடம்.

மாலையிற்கிடைத்தவுண்டிகொண்டிங்ஙன்வருமுன்வெய்யோன்
வேலையிற்படிந்தான்கஞ்சமீதொருபொய்கைவைகிக்
காலையிற்கழிதுவந்தேன்கலங்கியதுயரொண்ணுதென்
பாலயிர்த்திகழ்வதென்கொலென்றதுபரிந்துசேவல். (எஎ)

சேவலதுரைப்பப்பேடைநின்றிருமேனிச்செவ்விப்
பூவலர்மணப்பவேறோர்பெடையொடுபுணர்ந்துவந்தாய்
மேவலனின்னையென்னவென்னையோவெறுத்தியென்பா
லாவல்விட்டிருந்தாயன்றியிருட்குநீயஞ்சுவாயோ. (எஅ)

அஞ்சுவையுண்டியென்கொலருந்துணையென்கொலிந்தப்
* பஞ்சரமென்கொலிந்தப் † பார்ப்பென்கொல்பலவுமென்கொல்
வஞ்சகம்புரிந்தநின்கண்காணவேவலிதென்னுவி
துஞ்சுவதொன்றேநன்றென்றெழுந்ததுதுணிந்துபேடை. (எக)

பேடையைவிலக்கிச்சேவலுனையன்றிப்பிறவற்றோடுங்
கூடயானென்றுமில்லைக்கூடியதின்றுமில்லை
வாடுதலொழிதித்தமனைவியர்சலிப்பவேறு
நாடுவர்புறம்போயென்றுனரகமற்றதுபோலுண்டோ. (அ0)

உண்டொருவஞ்சமென்பாலீங்கினிதுரைப்பன்கேண்மோ
வண்டருங்கிரியிலிந்தவாலின்மேற்புற்றுள்வைகு
முண்டகன்பேரனுனமுனிபுகுநரகம்யானு
மண்டுறப்புகுவேனென்றுசேவல்வாய்மலர்ந்ததன்பால். (அக)

அன்புறுபெடையோடந்தச்சேவலன்றமைத்தவாய்மை
யன்புறுதவத்தினிற்குமுனிசெவியடுத்தலோடுந்
துன்புறுமனத்தினெண்ணித்துண்ணெனவெழுந்துநோக்கி
யென்பிறிதுரைத்தாயென்னைப்பறவைநீயியம்புகென்றான். (அஉ)

இயலறம்பொருளோடின்பம்வீடெனவிசைக்குந்தொன்னூல்
செயலுமின்பஞ்செய்துபின்பன்றேசேர்வார்வீடு
மயலொடுமனைவியங்ஙன்வருந்தவிங்கிருந்துநோன்பு
முயலிலென்முயன்றீயில்லையாகிலென்முனிவர்கோவே. (அங)

வேதநீயுரைத்தாயேனுமெய்த்தவம்புரிந்தாயேனு
மாதவண்மயங்கும்பாவம்வருமுனக் ‡ கறுதியையா
பேதமிலென்பெடைக்குயானொருபிழைசெய்தேனேற்
பாதகமெனக்குமுன்போலிவ்வழிபலிக்கவென்றேன். (அச)

* பஞ்சரம் - கூடு. † பார்ப்பு - குஞ்சு.
‡ அறுதி - நிச்சயம்.

என்றுரைசெய்ததந்தவேரண்டனிருடிநன்று
நன்றிதுசரதமென்னவிதயத்துணுடிநாடி
நின்றுநின்றேங்கியேங்கிநெடிதுயிர்த்துயிர்த்துவிம்மித்
தன்றுணைவிழிநீர்மல்கத்தையலைநினைந்துநைந்தான். (அரு)

தானவர் *பல்குங்காலம்பிறப்பதோதளர்ந்துநொந்து
வானவர் †அஃகுங்காலம்வருவதோமதிக்கவொண்ணுக்
கானமரளகக்கோதையிராத்திரிகரிதன்காதல்
போனதுமுனிக்குமீண்டுபுகுந்ததுமனத்தினூடே. (அசு)

ஊடுறுதுயராலன்னேனொருபதுவருடமாகத்
தாடுறுவேற்கண்ணாளைப்பிரிந்தநாளளவென்றெண்ணி
வாடுறுமனத்தனாகிவனமாயினுமிழிந்துபோயக்
கோடுறுமுலையாள்வைகுங்கொடிநகர்கடிதுபுக்கான். (அஎ)

வேறு.

புக்கனன்முனியெனப்பலருமுன்புகலலுந்
தக்கராத்திரிகரிதரிவுறுப்பிரிவினு
ணெக்கிநெஞ்சுருகிவந்தெதிர்கொடேகியமனைக்
கைக்குவித்திருபதம்பரவினுள்கருணையால். (அஅ)

தருணபங்கயமுகத்தழகெழுந்தணிகலந்
தருணகொங்கையிலணிந்தகின்மணந்தனையணிந்
திணருறுங்குழன்முடித்திருகண்மையெழுதினுள். (அகூ)

எழுதரும்வடிவினுளவளுயிர்க்கணவனிப்
பொழுதும்வந்தனனெனப்பொருவரும்பதியுளார்
முழுதுமத்தாதையுமுகமலர்ந்துருகினர்
பழுதிலாவிருவருங்கலவியுட்பழகினர். (கூ0)

நாரியும்முனிவனுநாடொறுங்கூடுறச்
சேரும்விண்ணவர்செயுந்தீவினைத்திறனெனா
மோருருக்கொண்டதேயொப்பவப்பேதைபாற்
காருருக்கருவயிற்றுற்றதக்காலமே. (கூக)

கோவிளைத்திளமுலைக்கண்கறுத்திதழ்வெளுத்
தாலிலைத்திருவயிற்றடிபுடைத்தழிதடித்
தோலையிற்குழைபொரும்விழிகுழிந்துடல்பழுத்
தேல்மடிச்சுவைபுளிப்பிவைசுவைத்தெய்தினுள். (கூஉ)

---

* பல்கல் - மிகுதி. † அஃகல் - குறைதல்.

எய்துமவ்வயவரோயெவையும்வந்துறுதலும்
பெய்தகோல்வளையினுளொருமகப்பெற்றனள்
வையிரண்டொருபதுங்கதிரொயிற்றதரமோ
டையிரண்டானனந்தானுமுண்டாயதே. (௬௩)

ஆகமேபுயனுமாயசனியேசொல்லுமாய்
வேகமாயடுசுடர்க்குஞ்சியாய்விஞ்சுமா
ருகநீள்பெலமுழைச்செவியுமாய்நவையிலா
வாகனுமகனைமின்மடியில்வைத்துருகினள். (௬௪)

நாளுமப்பருமுலைப்பெருகுபானல்கிமின்
ரேளனைத் * தரதனத்தொட்டிலிட்டசைதரத்
தாளினிற்றடவலுந்தளருமென்னடையுமாய்
வாளெயிற்றிதழ்மழக்குமரனும்வளருநாள். (௬௫)

வளருமாமதலையைமாதவத்தாதையுங்
கிளருமார்புடனணைத்தருமறைக்கிரியையா
லழகுமென்சவுளமுமழகுமுந்நூலுமங்
குளமகிழ்ந்துதவினனுவகையாலுருகுவான். (௬௬)

உருவமாமைந்தனுக்குமைதிருப்பாகனார்
தரும்வரம்வேண்டுமென்றெண்ணியத்தவமுனி
திருமகற்கொண்டுபோய்த்தெய்வவான்கயிலைப்புக்
கருணெறித்தவநிலென்றவனைவைத்தேகினன். (௬௭)

ஏகலுந்தசமுகன்றவமெரிக்கிடைசெய
நாககங்கணனுமுன்வந்துவாளுளவற்
காகமுக்கோடிதக்தகவிலங்கையுமளித்
தோகையாலிராவணப்பேருமன்றுதவினன். (௬௮)

வேறு.

உதவுஞ்சிவன்பால்வரம்பெற்றுளவாளரக்கன்
மதவெங்களிற்றின்வரமான்மறையோனில்வந்து
முதுவிண்ணவருக்குமுக்கோடிவாணாளுனக்கி
ததிகமிலைமீண்டளைக்கோடிவாங்கென்றழைத்தான். (௬௯).

அழைத்தான்மொழிகேட்டவ்வாளரக்கனரன்பாற்போய்ச்,
சிறந்தயோர்முக்கோடியுளைக்கோடிகரனாகச்செய்தாற்
புறந்தானிடுமென்பெரும்போர்க்குவாரேனார்தம்போரு
நிறந்தாழ்சடையாயெனத்தக்கதேனென்றுணிமலன். (௭௦௦)

* அரதனம் - நவமணிப்பொது.

மலரார்தடங்கட்டிருமால்புரிகின்றமாய
மலராமனத்தானறியான்களிப்போடகன்றான்
புலராமுகப்புன்முறுவல்புலவோரும்பூத்தார்
செலராசிவெற்பாற்கடைந்தோனகைத்தேதணந்தான். (௧0௧)

தணந்தான்கயிலைச்சயிலந்தனைவாளரக்கன்
மணந்தான்றனதூர்த்தமரோடுதந்தைதாய்மகிழக்
குணந்தான்கொடியோன்குடியெடுத்தன்றுதன்குலத்தோர்
கணந்தான்புறஞ்சூழக்கடலிலங்கைபோய்க்கலந்தான். (௧0௨)

கலந்தானிலங்கைப்புயத்தான்கடல்சூழிலங்கைப்
புலந்தானெடுநிக்குருகராய்ப்புகுந்தானுமெல்லை
நலந்தேடவன்றாயுலக்கைகையைவலக்கையாநளினத்
தலந்தானுடைநெற்குற்றுளைக்கண்டுளந்தளர்ந்தான். (௧0௩)

வேறு.

தானேநெற் குற்றுழக்குந் துயரொன்சொல் லுனக்கெனலுந் தாயுங் கேட்டு, மானேயுங் கரத்தானை மாப்பிடியின் வடிவமைத்து வணங்க வென்ன, யானேயித் தலைவாழ நெற்குற்று தலியல்போவென் றிலிங்கம் வாங்க, வானேறுஞ் சிவபெருமான் வடகயிலைத் திருமலைபோ யடைந்தா னன்றன். (௧0௪)

அன்றன்வந்திறைஞ்சவரனீபோந்ததென்கெலெனவவனென்னன்னை
கின்றுகம்பூசிப்பவோரிலிங்கந்தரவேண்டுமெலவென்ன
மின்னார்பொற்சடையோன்வழங்குதலுமவனேந்திமீளுங்காலை
நன்றாரணன்முடியத்தொடர்ந்தொர்முனியாகவழிநடுவேநின்றான். ()

ஆனவம்புத் துடையவட லரக்கன்வரும் பொழுதவனுக் கலர்ந்து தெண்ணீர்ப், பானமது செய்வதற்கோர் தவனநெடு மால்கொடுப்பப் பதிறிப் போந்து; மாருத னந்தமுனி வரனைநோக்கிப் புனலருந்தி வாயுச் சிட்ட, நீநளினக் கையேந்த வேண்டுமிந்த விலிங்க மென நெடிது சொற்றான். (௧0௫)

நெடியமுனி வீரனுநின்னை மூன்றுதரங் கூவுவன்ன் னேரம் வாரா, விடிலமர ரூர்க்கடைவு னென்றிடலு மரக்கனுந்தன் * வேடை யாற்றான், கடிததனுக் கொருமித்துச் சிவலிங்க மாமுனிதன் கைம்மேல் வைத்திக், கொடிமலர்ப்பூ வாவியிற்போய்க் குறுகலுமுக் குரலுமுனி கூவா நின்றான். (௧0௭)

கூவுமொரு முக்குரற்கும் வந்திலனென் றந்தமுனி குளிர்பொற் கையின், மேவுமிலிங் கத்தையயன் மேயுமொரு கோச்செவியில் விள

* வேடை, வெப்பம்.

ங்க காட்டி, யாவரசைத் தாலுமசை யாதிவணே யிருக்கவென விறை ஞ்சிப் போனான்; றேவரதைக் கோகர்ன்ன மெனப்புகழ்ந்தார் தசமுகன் றிரும்பிப் போந்தான். (க0அ)

வேறு.

போந்தான்முனியைப்புடைகண்டிலமென்
றுய்ந்தான்சிவலிங்கமொராக்குழையின்
வாய்ந்தால்யமாகிவயங்குதல்கண்
டேந்தாவிருகைகொடெடுத்தனனால். (க0கூ)

ஆலம்பருகும்பொருளச்சுதனார்
சீலம்பரிசொற்படிசேவடிவோ
தாலம்புகுலிங்கசயம்புவதாய்க்
கோலம்பெயராதுகொழுந்தெழுமால். (கக0)

எழுந்தானிறையைத்தழுவிக்கொடெடா
விழுந்தானடிவேர்பறிமேருவென
வழுந்தார்முடியத்தனையுஞ்சிதறிச்
செழுந்தார்கையிற்புடைசிந்தினவால். (ககக)

சிந்தாகுலமுற்றசினக்கொடியோ
னெந்தான்மெய்யொடுங்கிநுடங்கினனென்
றைநதாருவினுடவரார்த்துநகைத்
தெந்தாயெனவீசனையேத்தினரால். (ககஉ)

ஆலித்திடுமண்டரதிர்ப்பினெதிர்
கோலக்கிரிமந்தரமுங்குமுறக்
காலிட்டதன்வேர்பறியக்கடவா
மேலிட்டலைவேலையின்வீசினவால். (ககங)

சின்னம்படவக்கிரியைச்சிதைவித்
தின்னங்கயிலைத்தலையேகவெனாத்
தன்னந்தனிபோயினனத்தறுகண்
மன்னன்வழிமேலொருமால்வருவான். (ககச)

வான்மிக்கநரைத்திரைவண்ணவுடற்
கூன்மிக்கபுறம்பிடிகோலுடனான்
மேன்மிக்கதோர்வேதியனாகிநடந்
தேன்மிக்கவுனக்கிவ்விளைப்பெனலும். (ககரு)

என்னன்னைதொழற்கொரிலிங்கமுமை
மன்னன்றரவாங்கியதோர்முனிகோ

கன்னம்புகவைத்ததுகண்டமலன்
முன்னம்புகவின்னமுயன்றனனால். (ககசு)

நால்வேதியதூரநடந்துடல
மேல்வேடையடைந்துமெலிந்ததென
நீல்வேடணியம்பலுநீண்மறையி
னூல்வேறுபடாதவனுந்நுவல்வான். (ககஎ)

வானோர்பணியும்வடவெண்கயிலைத்
தேனோடுகுவட்டொருதிண்குவடு
தானோதவிலங்கைதரித்ததனை
யேனோர்கிலையாதுமுணர்ந்தறிவாய். (ககஅ)

ஆயும்பொருடம்மலைதென்கயிலை
யேயுஞ்சிவலிங்கமுமங்குளநீ
தோயுந்துயர்விட்டவனோடெனக்
கூயுங்கிருதன்கைகுவித்தகல்வான். (ககக)

அகலாழியிலங்கையகன்பதிபுக்
கிகலாவிரதம்பிறிதேறியொராம்
முகனூர்திரிகோணமுதற்பொருளைப்
புகநாடிவலஞ்செய்துபோற்றினனால். (கஉ0)

வேறு.

போற்றிநின்றிரதமுத்தாதிசைபபுறம்விடுத்
தூற்றவெற்பினொருகீழ்த்திசையினேறியுரவோ
னாற்றலிற்கொடியகையிருபதுங்கொடணைசெய்
தேற்றமிக்கவனெடுப்பவிறையோனுமசையான். (கஉக)

அசைகிலன்சிறிதுமென்றகலவிட்டவனுமீண
டிசையுமங்கைகளொரெட்டிறைவன்மேனியுறலாய்
மிசையின்மற்றவைபடப்படியின்மார்புவிரவத்
தசமுகன்றழுவிநம்பவெழுகென்றுதளர. (கஉஉ)

தளருமங்கைகளொரெட்டுறுதழும்புபெருமான்
வளருமங்கமொடுமுந்தியும்வராதமர்தலான்
மிளிருமண்டமழிநூழியினுமேனியழியா
தொளிருமெய்தனதுமெய்யெனவுணர்த்தினனரோ. (கஉங)

உணர்ந்தழாலயன்விழிக்கரியமெய்யுலையுமோ
வணிந்தவானுருவமானதுமகப்படுமதோ
பணிந்தபூதலமுறுத்துபதமும்பெயருமோ
தணிந்தஞானவொளியாயவெளியுந்தளருமோ. (கஉச)

மோசமுற்றநிருதன்முனிவுடன்கடிதெழுந்
தீ-ஙுற்றவரையைச்சினமொடெற்றுவனெனு
வீசுதெற்கிலுறவெட்டவவன்வாள்வயிரமற்
றூசறுத்தநிருதித்திசைவிழுந்ததது வே. (கஉரு)

வேகவெங்கனல்விழிக்கடைப்பொறிசிதறசீண்
மாகவெண்பிறையெயிற்றகலவாய்புகையெழச்
சேகரங்களொருபத்துமசையத்திசைதொறும்
போகவெங்கைவிசிறப்புலவர்மேனிகுலைய. (கஉசா)

குலையவேழுலகமுங்குலவுபாதலநெளிந்
தலையவான்முகடடங்கலுமதிர்ந்துழலநின்
றலையமேகபடலத்திடியொரோழ்கடல்களு
மலையவாயொருபதும்பெரிதுரப்பன்மலிய. (கஉஎ)

பல்லெயிற்றெறுகெடித்தபகுவாய்முழைமடித்
தொல்லையிற்சினமெழுப்பியெரியுரோமவழிபோய்ச்
செல்லவக்கடல்விடந்தனிதிரண்டவடிவீ
தல்லதொப்பிலையெனப்பலருமஞ்சியலற. (கஉஅ)

அலறியாதவனுமம்புலியுமஞ்சியயல்போய்
விலகநீள்பெரியதோளவனைந்தவறையாற்
குலவுமேருவரைசாயமுதுகூற்றும்வெருவக்
கலகவூழியிதுகாலமெனநாகர்கதற. (கஉகூ)

கதறுதிர்ந்தமலர்தென்கயிலையிற்கடமிழிந்
திதனையின்றடிபெயர்ப்பனெனவெய்திநிருதன்
மதியமண்டலமடுத்தவரவுக்குவடுவாற்
புதியகுன்றடிபடிந்திடுபுயற்குநிகர்வான். (கநூo)

வானெடுத்தவரையைக்கரம்வளைந்துதழுவித்
தானெடுத்தலுநடுங்கினசகங்கள்முழுதுந்
தேனெடுத்ததிருவாயுமைதிகைத்துவெருவிக்
கானெடுத்தசடையானிடைகலந்தனளரோ. (கநூக)

கலத்தலுமுமைதழீஇயகையுடன்கைதழுவி
கலத்திடப்புறமவட்கருளுநன்னடையுமாய்ப்
பொலத்தடக்கைகளொரொட்டுமொர்முகப்பொலிவுமாய்
வலத்திருப்புறமரக்கன்மிசைவைத்தசினமாய். (கநூஉ)

சினமழுத்துடிசெறிந்தகிரிசூலமசைய
மனைவிளைத்தழுவுகையில்மணிமால்வணாதொய

யனையநாகமதனங்குசமொடவ்வரதமு
மீனயகைதொறுமமைத்தினிதுதெற்குமுகமாய் (கங௩)

மாயனுடரியதோரடிமடித்தொரடிகீழ்த்
தோயவீரமுதிராசனமிருந்துதுணைவன்
சேயதோர்விரனுதிக்கொடுமுனிந்துசிறிதே
யாயராவணனையெற்றலுமவன்கதறினன் (கங௪)

நானிலங்களுமதிர்ந்துடனடுங்கவலறிப்
பானுவின்சுடர்படுங்கடல்சிவந்தபடிபோன்
மேனியெங்கணும்விழுங்குருதிவெள்ளமொழுகத்
தானெருங்கியலையாழியிடைதாழ்ந்தனனரோ. (கங௫)

தாழ்ந்தனன்கனலிதிக்கொருதனித்தசமுக
னாழ்ந்தவுதன்கடலினன்றொருமைநாகமயர்வால்
வீழ்ந்ததொன்றுவமையல்லதயல்வேறுமுளதோ
சூழ்ந்துவிண்ணிடையினின்றமரர்துள்ளல்புரிவார். (கங௬)

வேறு.

வாரிவிழுந்தவன்மீளவெழுந்திலன்வாராவென்
றாருமவுன்பரிதேரொசிந்தியுடைந்தேகச
சீரியவங்கைகொடெற்றியெறிந்துதெளிந்தேகின்
முருமகிழ்ந்தினிதாடினர்பாடினரவ்வானோர். (கங௭)

வானவர்துள்ளுமகிழ்ச்சிகள்கோணமலைக்கேவாழ்
வானவர்கண்டுகளித்தலுமானைமுகத்தோனும்
ஞானவிரிஞ்சனும்வந்துவலந்தொழுநல்வேலோன்
கானநுறுந்துளவோனுடனின்றுகசிந்தோத. (கங௮)

ஓதநெடுங்கடனஞ்சமுவந்தினிதுண்டோர்பா
லாதரவம்பிகையுந்துயர்மாறினளன்பூரப்
போதமகிழ்ந்துவணங்கியிணங்கினர்பொன்னுடர்
வேதமுழங்கின்கோணமலைத்தலைமீதன்றே. (கங௯)

அன்றுமைபங்கொருபாதிவிளங்கவரன்பாதி
நின்றுருவாயருவாகியகம்புறநீங்காதா
யொன்றுமிரண்டுமிரண்டெனன்றுமுடன்வேறாய்த்
துன்றியிருக்குயிராயவர்தோன்றினர்தோன்றாதார். (கஉ0)

தாரணிநீர்கனல்கால்வளியேமுதலானத்
தோரணியாதியனாதியதாயொரெழுத்தானார்
பேரணியண்டமகண்டமொடாணவிபெண்ணானர்
சேரணிதென்கயிலைத்தலையின்றொருமெய்யானார். (கஉக)

## வேறு.

ஆனவக்கடவுட்சோதியவிர்திருமேனிநோக்கி
வானவர்தடக்கைகூப்பிமாலயன்வருந்திக்காணு
ஞானமாஞ்சுடரேயெங்கணற்றவப்பயனேயின்றே
நீனமாமரக்கனுலீடேறினம்யாமுமென்பார். (கசஉ)

பாரியமறையினுச்சிபரத்துறைபதத்தின்செவ்வி
கூரியவரக்கனுற்கண்டிருவிழிகுளிராநின்றேம்
பூரியனென்னுநல்லோர்நிருதனைப்போலவுண்டோ
வாரியினஞ்சுண்டெங்களுயிர்தந்தாய்வாழியென்பார். (கசங)

வாழியவுலகீரேழுமியாங்களுமழியாவண்ண
மாழிநஞ்சுண்டநன்றியதனினுநன்றிதையா
பாழியம்பொருப்பின்கீழ்போய்நிருதன்பாதாளம்வீழ
வூழியின்முதல்வநீயின்றோருருக்கொண்டதென்பார். (கசச)

கொண்டலிற்கரியகூற்றையொருமறைக்குழவிக்காகப்
பண்டுதைத்தருளுமன்றோர்பதங்கடவூரிற்கண்டோம்
மண்டுமெம்பொருட்டாலிந்தவரக்கனைநெரிக்கும்பாதங்
கண்டனமின்றேதென்பாற்கயிலைமாமலையிலென்பார். (கசரு)

என்றவரிறைஞ்சிப்பூசித்தெண்கணுன்முகுந்தனேத்தத்
துன்றிருங்கதிருந்திங்கட்சோதியும்விளக்கமேந்த
வன்றிரைக்கடல்சூழ்ந்தார்ப்பவருந்திரிகூடவெற்பிற்
றன்றுணைத்தேவியோடுந்தம்பிரானிருந்தகாலை. (கசசு)

காலமுமனேகஞ்செல்லநிருதனுங்கடலுணின்று
கோலவெங்கண்டன்றன்னிற்சிலகண்கள்குளிர்பூவென்னச்
சீலமோடிடந்துவெற்பின்றிருவடிக்கிட்டுஞான
மூலமேயபயந்தீயேன்முழுப்பிழைபொறுத்தியென்றே. (கசஎ)

என்றொருசிரத்தைவாங்கியெரிபுனைகுஞ்சிநீக்கிக்
குன்றலில்குருகுதள்ளிக்குடுகெனவீக்கிமுன்கை
நன்றெனா * வுளகுதாங்கிநரம்பினங்கம்பியாக்கி
வென்றிசேர்வீணையேந்திமிழற்றினன்கீதநாதம். (கசஅ)

நாதமங்கெழுந்தபோதுநனியுவர்க்கடற்குமுண்டோ
கோதிலாவமுதமென்னக்குளிரிசையுமையாள்கேட்டுப்
பாதமீதிறைஞ்சியீசற்குரைத்தலும்பரமனம்மை
யாதரிப்பவனைநம்பாலழைத்திபோய்நந்தியென்றான். (கசகு)

* உளகு - யாழிலேருறுப்பு.

நந்தியும்விடைபெற்றேகிநளிர்கடற்கீழ்போய்வீழ்ந்து
சிந்தியசிந்தையானைச்சிவனழைத்தனனென்றோத
வந்தபின்றிசையின்மேகமதிர்ந்துபோவதுபோல்வேத
மூந்துறும்வாய்தளார்ப்பமுகந்தொறுங்கண்ணீர்பெய்தான். (௧௫௦)

தானுளநீளமானயோசனைமுப்பதோடு
மானமார்பகலநான்குயோசனைவடிவத்தோடும்
ஞானமார்நந்திசொன்னநலஞ்செவிபுகுதலோடு
நீனிறக்கடல்விட்டோங்கிநிருதனுமிர்தலுற்றான். (௧௫௧)

உற்றெறிகடற்கண்மேகமுதித்தெனவெழுந்துசெவ்வி
துற்றிடுமுகமொன்பானுந்தொட்டகட்குழியுங்கையாற்
பெற்றதோர்யாழுங்கொண்டுபெருந்தகைநந்திபின்போய்ப்
புற்றரவணிந்தகோனைப்புனிதன்முன்பணிந்துநின்றான். (௧௫௨)

நின்றபோதமலனந்தநிருதனைநோக்கியன்பா
லன்றரிசிரமுந்தொட்டவருவிழிச்சுடருமுன்னாட்
குன்றுறுவாளுமீளக்கொடுத்துக்கோடீசலிங்க
மொன்றுமங்களித்துசசெல்கென்றேவத்தாழ்ந்தொல்லைமீண்டான். ()

மீண்டவன்போகும்போதுவிடுசிகைத்தலையுநூலும்
பூண்டபூந்தழையுமேந்திப்பூசிக்கவருவான்போல
நீண்டமான்மறையோனாகிநிருதன்முன்வரலும்வெற்பைக்
கீண்டவனவனையந்தக்கிரிவருநீயாரென்றான். (௧௫௪)

ஆனொனநெடிதுகேட்டவிராவணன்வதனநோக்கிப்
பாரொனும்பரப்பிற்றெய்வப்பதியெங்கும்பணிந்திப்போது
காரணவரக்கர்வாழக்கைக்கடலகவிலங்கைநின்றே
யாரணமுதல்வற்போற்றியரிச்சிப்பான்வந்தேனென்றான். (௧௫௫)

வந்தனனெனலுமங்கவ்வளம்பதியியல்பேதென்ன
வந்தவூரரக்கர்கோமானன்னையாமொருத்திமேனாட்
சுந்தரப்புதல்வன்கோணமலையின்கீழ்த்துணிந்தானென்ன
நைந்துநொந்துயிரும்விட்டாளென்பரனுடொன்றான். (௧௫௬)

என்னுமம்மொழிநாராசமிருபதுசெவியும்பாயத்
தன்னுயிர்பதைத்துநெஞ்சந்தளர்ந்துவீழ்ந்தெழுந்துவாய்விட்
டன்னையோவன்னையோவிவ்விலிங்கமார்க்களிப்பனையோ
நின்னையுமிழந்தென்னாவிநிற்குமோநிலத்திலென்றான். (௧௫௭)

என்றவனிரங்குங்காலையிலிங்கநின்கரத்திலேந்தி
நின்றிரங்குவதொண்ணாதென்றிலிங்கந்தன்னெடுங்கைதாங்கி

## வேறு.

ஆனவக்கடவுட்சோதியவிர்திருமேனிநோக்கி
வானவர் தடக்கைகூப்பிமாலயன்வருந்திக்காணு
ஞானமாஞ்சுடரேயெங்கணற்றவப்பயனேயின்றே
ரீனமாமரக்கனுலீடேறினம்யாமுமென்பார். (கச௨)

பாரியமறையினுச்சிபரத்துறைபதத்தின்செவ்வி
கூரியவரக்கனுற்கண்டிருவிழிகுளிராநின்றேம்
பூரியனென்னுநல்லோர்நிருதனைப்போலவுண்டோ
வாரியினஞ்சுண்டெங்களுயிர்தந்தாய்வாழியென்பார். (கச௩)

வாழியவுலகீரேழுமியாங்களுமழியாவண்ண
மாழிநஞ்சுண்டநன்றியதனினுநன்றிதையா
பாழியம்பொருப்பின்கீழ்போய்நிருதன்பாதாளம்வீழ
வூழியின்முதல்வனீயின்றேருருக்கொண்டதென்பார். (கசச)

கொண்டலிற்கரியகூற்றையொருமறைக்குழவிக்காகப்
பண்டுதைத்தருளுமன்றேர்பதங்கடவூரிற்கண்டோம்
மண்டுமெம்பொருட்டாலிந்தவரக்கனைநெரிக்கும்பாதங்
கண்டனமின்றேதென்பாற்கயிலைமாமலையிலென்பார். (கசரு)

என்றவரிறைஞ்சிப்பூசித்தெண்கணன்முகுந்தனேத்தத்
துன்றிருங்கதிருந்திங்கட்சோதியும்விளக்கமேந்த
வன்றிரைக்கடல்சூழந்தார்ப்பவருந்திரிகூடவெற்பிற்
றன்றுணைத்தேவியோடுந்தம்பிரானிருந்தகாலை. (கசசு)

காலமுமனேகஞ்செல்லநிருதனுங்கடலுணின்று
கோலவெங்கண்டன்றன்னிற்சிலகண்கள்குளிர்பூவென்னச
சீலமோடிடந்துவெற்பின்றிருவடிக்கிட்டுஞான
மூலமேயபயந்தீயேன்முழுப்பிழைபொறுத்தியென்றே. (கசஎ)

என்றொருசிரத்தைவாங்கியெரிபுரைகுஞ்சிநீக்கிக்
குன்றனில்குருகுநள்ளிக்குடுகெனவீக்கிமுன்கை
நன்றென * வுளகுதாங்கிநரம்பினங்கம்பியாக்கி
வென்றிசேர்வீணையேந்திமிழற்றினன்கீதநாதம். (கசஅ)

நாதமங்கெழுந்தபோதுநனியுவர்க்கடற்குமுண்டோ
கோதிலாவமுதமென்னச்குளிரிசையுமையாள்கேட்டுப்
பாதமீதிறைஞ்சியீசற்குரைத்தலும்பரமனம்மை
யாதரிப்பவனைநம்பாலழைத்திபோய்நந்தியென்றான். (கசக)

* உளகு - யாழினுறுப்பு.

நந்தியும்விடைபெற்றேகிகளிர்கடற்கீழ்போய்வீழ்ந்து
சிந்தியசிந்தையானைச்சிவனழைத்தனனென்றேத
வந்திம்பிசையின்மேகமதிர்ந்துபோவதுபோல்வேத
முந்துறும்வாய்தளார்ப்பமுகந்தொறுங்கண்ணீர்பெய்தான். (கடுo)

தானுளனீளமானயோசனைமுப்பதோடு
மானமார்பகலநான்குயோசனைவடிவத்தோடும்
ஞானமார்நந்திசொன்னநலஞ்செவிபுகுதலோடு
நீனிறக்கடல்விட்டோங்கிநிருதனுயிர்தலுற்றான். (கடுக)

உற்றெறிகடற்கண்மேகமுதித்தெனவெழுந்துசெவ்வி
துற்றிடுமுதமொன்பானுந்தொட்டகட்குழியுங்கையாற்
பெற்றதோர்யாழுங்கொண்டுபெருந்தகைநந்திபின்போய்ப்
புற்றரவணிந்தகோணைப்புனிதன்முன்பணிந்துநின்றான். (கடுஉ)

நின்றபோதமலனந்தநிருதனைநோக்கியன்பா
லன்றரிசிரமுந்தொட்டவருவிழிச்சுடருமுன்னுட்
குன்றுறுவாளுமீளக்கொடுத்துக்கோமடீசலிங்க
மொன்றுமங்களித்துச்செல்கென்றேவத்தாழ்ந்தொல்லைமீண்டான். ()

மீண்டவன்போகும்போதுவீடுசிகைத்தலையுறாலும்
பூண்டபூந்தழையுமேந்திப்பூசிக்கவருவான்போல
நீண்டமான்மறையோனுகிநிருதன்முன்வரலும்வெற்பைக்
கீண்டவனவனையந்தக்கிரிவருநீயாரென்றான். (கடுச)

ஆரெனநெடிதுகேட்டவிராவணன்வதனநோக்கிப்
பாரொனும்பரப்பிற்றெய்வப்பதியெங்கும்பணிந்துப்போது
காரணவரக்கர்வாழக்கைக்கடலகவிலங்கைநின்றே
யாரணமுதல்வற்போற்றியரிச்சிப்பான்வந்தேனென்றான். (கடுரு)

வந்தனனெனலுமங்கவ்வளம்பதியியல்பேதென்ன
வந்தவூரரக்கர்கோமானன்னையாமொருத்திமேனுட்
சுந்தரப்புதல்வன்கோணமலையின்கீழ்த்துணிந்தானென்ன
நைந்துநொந்துயிரும்விட்டாளென்பரன்னுடனொன்றான். (கடுசு)

ஏன்னுமம்மொழிநாரீசமிருபதுசெவியும்பாயத்
தன்னுயிர்பதைத்துநெஞ்சந்தளர்ந்துவீழ்ந்தெழுந்துவாய்விட்
டன்னையோவன்னையோவிவ்விலிங்கமார்க்களிப்பனையோ
நின்னையுமிழந்தென்னுவிநிற்குமோநிலத்திலென்றான். (கடுஎ)

என்றவனிரங்குங்காலையிலிங்கமின்கரத்திலேந்தி
நின்றிரங்குவதொண்ணுதென்றிலிங்கந்தன்னெடுங்கைதாங்கி

மன்றலங்கயிலைவெற்பில்வாமபாணிருதிதிக்கில்
வென்றியஞ்சயம்புவாகவிரிகடல்வண்ணன்வைத்தான். (கறுஅ)

வைத்தநீர்க்குமிழிமாய்ந்தால்நீரதாமண்ணேடேமண்
ணேத்திடுமுடலுக்கென்கொலிரங்குவையோர்பால்வாடை
மெய்த்தளிர்ச்சருகுகூட்டவதனைவெஞ்சூறையோர்பாற்
றத்துறப்பிரிக்குமாவிசரிப்புமன்னதுவேயன்றே. (கறுகூ)

ஓவெனவரற்றின்மாண்டார்க்குறுவதோருறுதியாமோ
தாவறுமுதகப்பேறுந்தானமுங்கடனும்யாவுந்
தேவர்தந்தேவன்கோணத்திருமலையதனிற்செய்தான்
மேவுமுன்னுன்னையந்தவும்பர்தம்வீட்டினும்பர். (கசுo)

உம்பரிக்கயிலைதன்னிலொருபொழுதுமையாளீசன்
வம்பவிழ்சடையைக்கையால்வகிர்தலுங்கங்கையஞ்சிக்
* கம்பிதங்கொளலுநம்பன்கண்டுகைநகத்தால்வாங்கிச்
சம்புவின்றீவின்றென்பாற்சாகரத்தெற்றிவைத்தான். (கசுக)

எற்றியபோதுகங்கையிலங்கையுத்தரபால்வேலை
சுற்றியதிரைகள்போர்ப்பத்துலங்கலுமதற்குமேலாய்
முற்றிரிகூடநாட்டிமுழையதனுப்பட்செய்து
நற்றியபெருமான்றீர்த்தநடுவுறமூளைத்துநின்றான். (கசுஉ)

நின்றவக்கடவுட்குன்றைநினைந்தொருவலஞ்செய்வார்பொற்
குன்றினுஞ்சென்றுநூறுகொடுமுடிசூழ்வதொக்கும்
பொன்றலில்வடிவுகாணப்புறந்திடுமச்சமென்ன
வன்றரன்கயிலைக்கொப்பவமைத்ததிக்கயிலைகண்டாய். (கசுங)

ஆய்ந்தசீரிடையாலோடியலங்குகாவிரியினீரும்
பாய்ந்தபிங்கலையாலோடிப்பரந்தமாவிலியினீருந்
தோய்ந்தபேராழியின்கட்சுழிமுனைவடிவாய்நேர்புக்
கேய்ந்தவான்கங்கைதன்னேடிசைந்ததிக்கயிலைகண்டாய். (கசுச)

கண்டவிக்கயிலைச்சாரற்கலந்தநாற்றிசைநாற்காத
மண்டனிற்சனித்தபேதமருவுபல்லுயிர்களெல்லாம்
விண்டனிக்கடவுளாமிவ்வெற்பினிற்கங்கைநீர்தோய்ந்
துண்டவர்சாருபத்தினுதிப்பதுதிண்ணம்திண்ணம் (கசுரு)

திண்ணலந்தொலையாதின்னுஞ்செப்புவநிருதகேண்மோ
வுண்ணலங்கூரப்பூசையுமாபதிபக்கீவரோனுந்

* கம்பிதம் - நடுக்கம்.

தண்ணலங்கலுழுந்தெண்ணீர் தருகுவரோனுமன்று
ரண்ணலம்பெருமான்மெய்யோடடைவதற்கையமில்லை. (௧௬௬)

இல்லையென்றில்லந்தோறுமிரந்திடுபொருள்களேனு
நல்லவைமுக்கூற்றுக்கிநாதனுக்கொருகூறீவார்
தொல்லையில்வினையுந்தீர்ந்துசோதிபேருலகிற்சேர்வ
ரல்லதுமுத்தியென்னுமரியவீடடையமாட்டார். (௧௬௭)

மாட்சியங்கயிலையாமிம்மலைக்குநாற்றிசைநாற்காத
மாட்சியினிலைபூநன்காயருங்கனிகந்தமாதி
காட்சியினுன்கின்றென்றிக்கடவுளுக்களித்துணுதார்
சேட்செறிகடற்கணுமையாயவர்செனித்துவீழ்வார். (௧௬௮)

வீழ்சடைக்கடவுட்கேகிணைவெற்பினுச்சிட்டம்வீழ்த்தல்
வாழ்தனிமடவாரோடுவசித்தல்கம்பளத்தில்வைகல்
கீழ்விடுமலசலாதிகிரியினில்விடுத்தல்செய்வார்க்
கேழ்பெருநரகிலப்பாலிருணரகவர்வீடென்றான். (௧௬௯)

ஆனவிக்கயிலைதன்னிலானபிடேகநேரம்
போனகமருந்துநேரம்பூசனைமுடிந்தநேரந்
தேனவிழ்சடையார்முன்போய்த்தெரிசனையிடமுமாகா
கானகிலத்திலுான்றிக்கடுநடைவலமுமாகா. (௧௭0)

காவணம்பொய்கைபைம்பூங்காவனமரற்குச்செய்வார்
கோவிலுமதிலுஞ்செம்பொற்கோபுரமுதலசெய்வார்
மேவுமெல்லாடைசந்தம்வெண்மணிப்பூணுமீவார்
மூவுலகிறைஞ்சுந்தேவர்முடியின்மேலடியும்வைப்பார். (௧௭௧)

வைக்குமிக்கயிலைதன்னின்மாதவம்புரிந்துநோற்றன்
மிக்கமந்திரங்களுன்னல்வீய்ந்தவருயிர்க்குப்பேறு
யுய்த்குறப்பலியுண்டாக்கலுறுபசிக்குணவுபெய்தல்
புக்கொருதானநல்கலதன்பலன்புகலொணுதால். (௧௭௨)

ஆதலாலரன்முக்கோணமெளியதன்றரக்கர்கோவே
பூதலந்தன்னிலிந்தத்தானமேபோலவுண்டோ
தாதலாலின்றுன்னனிலைகதிபெறப்பலிகன்மாதி
தீதிலாதியுற்றிலிங்கோர்தீர்த்தமுண்டாக்குகென்றான். (௧௭௩)

என்னலும்வருணதிக்கிலிராவணன்கதைகொண்டெற்றத்
கன்னியம்புனிதகங்கையுதித்ததுகயிலைச்சார
லன்னதுநோக்குமாலாமருமறையவனுமின்றுன்
மன்னியவன்னைசெய்தமாதவமீதுகண்டாய். (௧௭௪)

ஆயிரம்வருடங்காசியரும்பெருங்கங்கைதோயுஞ்
சேயிருபலனுமிந்தத்தென்கயிலாயச்சாரன்
மேயவிண்ணிலவிவெள்ளம்விரிந்தெனவிரிந்தகங்கை
நேயமோடின்றுதோயும்பலனுமோர்நிறைகண்டாயே. (கஎரு)

வேறு.

கண்டசின்கதையினுனுதித்தகங்கையைத்
தண்டலிலாதபாதாளகங்கையென்
றண்டரும்புகழுகவகிலம்வாழ்த்துக
மண்டுமிப்பொருட்டினுன்னன்னைவாழ்கவே. (கஎசு)

வேரியகங்கையின்கரையின்மீதுநீ
பாரியபலிகன்மமாதிபண்ணெனக்
கூரியகுசையவன்கைக்கொடுத்துமீண்
டாரியன்வாங்கிநின்றமைப்பதாயினன். (கஎஎ)

ஆயிடைப்பிண்டமொன்றுக்கிவெந்துயர்த்
தீயிடையிராவணன்செங்கையீந்துநின்
றூயடையக்கதிசானுவூன்றியுன்
வாயிடைத்துதித்திவண்வைத்தியாலென்றான். (கஎஅ)

ஆலமர்கடவுளைத்துதித்தரக்கன்மண்
மேலமர்படமுழந்தாள்விளங்கவைத்
தேலமாகதிபுகவெனதுதாயெனப்
பாலமர்பிண்டமும்பரிந்துகாட்டினன். (கஎகூ)

நாட்டியபிண்டத்தைநாரணன்கர
நீட்டியகுசையினுனெகிழ்த்திரண்டுசெய்
தீட்டியவலதுபங்கிட்டுபங்குறக்
கூட்டினன்சிவத்துதிக்கொள்கைகொண்டரோ. (க௯௦)

கொண்டதுபிதிர்ப்பலியினிமுக்கோணமீ
தண்டர்நாயகற்பணிந்தாகச்சேவடி
முண்டகந்தொழுதுநின்னன்னைமுத்தியே
கண்டிடவேண்டுநீகடிதுவாவென்றான். (க௯க)

வாவெனநிருதனுமெழுந்துமாலுடன்
* சேவினன்கயிலையிற்சென்றுமுன்பணிந்
தோவியநிகருமைபங்கவுன்பத
மேவவென்னன்னைக்குவேண்டினேனென்றான். (க௯உ)

* சேவினன் - சிவன்.

என்றலுஞ்சிவபதமின்றுன்னன்னைக்கு
நின்றிடக்கொடுத்தனனிருதசெல்கெனக்
குன்றவில்லுடையவன் † கூறப்போற்றிமுன்
சென்றமாலுடனவன்சிகரிக்கீழ்வந்தான். (க௮௩)

வந்தனைமறைஞனுக்கியற்றிமற்றினிச்
சிந்தனையென்னென்னத்தானஞ்செய்கெனச்
சுந்தரப்பொன்முகில்சொரிவபோல்வரு
மந்தணரியாவர்க்குமளிக்கின்றனரோ. (க௮௪)

ஆனவக்காலையிலரனும்வேதனுஞ்
சேனையோடையிருகோடிதேவரு
ஞானமாமறையவராகிநண்ணினர்
தானமீந்திராவணன்றழ்ந்துபோற்றினன். (க௮௫)

போற்றரன்பிறகியாம்பொற்பிலிங்கமொன்
றேற்றநால்வேதன்பூதேசவிலிங்கமொன்
றாற்றமாங்கேசவனுருத்திரேசமாய்ச்
சாற்றுபேரிலிங்கமொன்றவன்கைதந்தனன். (க௮௬)

தந்தமூன்றிலிங்கமுந்தருமுக்கோணமீ
தந்தமோடணைக்கிலுன்னன்னைமுத்தியா
மந்தரப்புயவெனமறைந்துபோயின
னெந்தமாயங்கொலென்றிறைஞ்சியேத்தினன். (க௮௭)

ஏத்தியுந்திருமறைதேடற்கெய்திடாப்
பூத்திகழ்திருவடிப்புலையனென்னையுங்
காத்திடநடந்ததோகடவுளேயென
வாய்த்திடபத்துவாய்தோறும்வாழ்த்தினன். (க௮௮)

வாழ்தருமக்கினிவாயுவிந்திரன்
சூழ்தருதிசைதொறுங்கயிலைச்சுற்றினுந்
தாழ்சடைப்பிறகிபூதேசன்றாரணி
யேழ்புகழுருத்திரவிலிங்கந்தாபித்தான். (க௮௯)

வேறு.

தானிறைஞ்சியதன்மையால்
ஞானநம்பனைநண்ணினன்
கானயாழொடுகல்வியா
லூனமில்லிசையோதினன். (க௯௦)

---

† கூறவாங்கிமுன் என்பதூஉம். பாடம்.

ஓதியோதியுணர்ந்துணர்ந்
தாதிசோதியநாதியின்
றேதிலாவிடையெற்கெனு
வேதராவணன்மீண்டனன். (கககக)

மீண்டராக்கதர்வேந்தன்மாப்
பூண்டதேர்மிசைப்புக்குநீள்
காண்டருங்கடமுங்கடந்
தீண்டிலங்கையுளெய்தினன். (ககக௨)

எய்தரக்கனெதிர்புகுந்
தையனுற்றனனுமெனுக்
கைகுவித்திருகாறெழா
மெய்யுவப்பொடுமேவினன். (ககக௩)

மேவுமிக்கதைமெய்ந்நல
மாவதோக்கவறைந்தனந்
தேவனுற்றதிருப்பதிப்
பாவகத்தியல்பன்னுவாம். (ககக௪)

பன்னுமீசர்பதிக்கதை
மன்னுநூல்வழியேமனத்
துன்னுவார்சிவலோகமீ
தன்னவானவராகுவார். (ககக௫)

தரிசனமுத்திச்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௫ககசு.

## திருநகரச்சருக்கம்.

வாருலவுமுகிழ்முலையுமுத்தரியமணிப்பட்டுமலர்க்கண்ணுேக்குங்
காருலவுசுரிகுழலுமொருபாகந்திருமேனிகலந்துதோன்றச்
சீருலவுநதியரவுமதிமுடிமேலொருபாகஞ்சிறக்கத்தோற்று
நீருலவுகயிலைமலைப்பெருமானைமறவாதென்னினைவுநெஞ்சம். (க)

நெஞ்சகத்தில் வஞ்சமிலாத் தசரதன்பாற் றிருமாய னெடுவெண்
ப்வ்வத், தஞ்சனக்குன் றெனச்சிறந்து கோசலைதன் வயிற்றுதித்தங்
கயோத்தி நாட்டிற், குஞ்சரத்தின் விளையாடிச் சானகியை மணம்

புரிந்து கூனி செய்த, வஞ்சகத்திற் கைகேசி மதிமுறையால் விதி
முறையே வனத்தி லேகி. (௨)

கிள்ளையெனு மொழிவனிதைச் சானகியு மிலக்குமனுங் கிளர்பூஞ்
செங்காற், பிள்ளையெனு மிளங்காளை யிராமனுமாய்த் தனிவனத்தே
பிறங்கு நாளிற், கள்ளவிழிச் சூர்ப்பனகி யிலக்குமனை வலிதுறுமக்
காமந் தன்னாற், றுள்ளிவிழ மூக்கறிந்த காரணத்தை வேறொன்றாய்ச்
சொல்லி நின்றாள். (௩)

நின்றடமெய்ப் புயத்தழகுக் கிணங்குமிரு தனத்தொருத்தி நிமி
ர்பூங் காவிற், குன்றனையா ருடன்புகுது மவனையுனக் காமென்ற குறி
ப்பி னாலே, கன்றியெனைச் செய்தகுறை யீதெனவே நின்றுரைத்த
கடும்பெரிய் யந்த, வென்றிதரு மிராவணனைத் தின்றுமிழ வொருகூற்
றம் விடுத்து மீண்டாள். (௪)

மீளாதவிரகமதிபரவுதலாலிராவணனும்விரைவினேகி
மூளாதுபொய்ம்மானும்வனத்திடையேமாதுலனைவரவிட்டந்த
நாளாதிதனிற்சென்றுசீதைதனைக்கொணர்ந்துசிறைநண்ணிவைத்த[ம்
த்தாளாண்மைதனிலிழந்தானிராகவன்கையம்பொன்றாற்றலைகள்பத்து

* பத்தனமுமெத்திசையுமிலங்கைநகராசனமும்பரிதிசூழ்ந்த
முத்தலமுமரசுரிமைவிபூஷணற்குமால்கொடுத்தமுறைமையாலிவ்
வித்தகனைமதியழிக்கவிராவணன்றன்பிரமகத்திமேவமாழ்கிச் [ன்.
சுத்தமணித்தென்கயிலைப்பெருமானையிராமனுடன்றொழுதான்கண்டா

கண்டகைய விராவணனை முன்விரலாற் பொருதாளுங் கருத்து
மற்றப், புண்டரிக மலர்த்தாளு மொருபாக மமர்ந்தாளும் புனிதத் தா
ளுந், துண்டமதி தரித்தாளுங் கோடீர மிருந்தாளுந் துலங்கித் தோன்
றக், கொண்டல்விடு மதிபோல வுளமதியுந் தெளிந்துவிழி குளிர்ந்து
நின்றான். (எ)

நின்றுகர சரணங்கள் கம்பித்து மயிர்பொடித்து நினைவுண் டா
கித், துன்றுமதியொளிகண்ட காந்தமென விழித்துணைநீர் துளிக்க
நோக்கிச், சென்றடகை நிருதன்பாற் கறுத்தமலர்ச் சீர்பாதஞ் சிறந்
து தோன்ற, வின்றடியேன் பெற்றபய னிமையோரும் பெற்றனரோ
வென்றான் போற்றி. (அ)

போற்றிதிரிபுரதகனகலாந்தகாமததகனபுனிதாபோற்றி
போற்றிகரகாபாலதானவசங்காரகரபுனிதாபோற்றி

---

* பத்தனம் - பட்டணம்.

போற்றியுரகாபரணவரியதளகயிலைமலைப்புனிதாபோற்றி
போற்றிசயசயபோற்றிதிரிசூலதரபோற்றிபோற்றியென்றான். (௯)

என்றென்று துதித்திறைஞ்சி * விபூஷணனவ் விராமனெனு மிய ற்பேருள்ள, குன்றென்று மலர்ந்தவிரு கோகனகம் போற்றியிதழ்க் குமுதம் பேணி, நின்றிங்கோ ராலயமிங் கியற்றுதுநம் வினைதீர்த்த நிம லற் கைய, நன்றென்றான் னருள்புரிந்தா லதுபோது மென்றவனு நல்ல தென்றான். (௧0)

நல்லமதி வைகாசி நற்குருமான் றலைதிங்க ளலத்த வோரை, சொ ல்லியமுற் பக்கமுறும் பஞ்சமியி னுட்கொண்டு தொகுத்துக் கோயில், வல்லவசிட் டனைத்தொழுது தெய்வநா யகன்றனது வடிவந் தீட்டி, யல்லிமலர்த் தாள்போற்ற வேண்டுமென வவன்செய்வா னன்பு கொ ண்டான். (௧௧)

கொண்டலுறு மின்போல விராவணன்றன் காட்சியினுற் குலவு மேனி, யண்டரெலாம் படத்தெழுதுந் திருவுருவை வசிட்டமுனி யழ கு கூரத், தண்டவளச் சித்திரவோ டலம்புரியா விபூஷணனுந் தாழ்ந் துள் ளன்பாற், கண்டருளிக் கோயிலின்கண் ணமைவித்தான் ஞான விழி கலுழ மார்பன். (௧௨)

பன்னகத்திற் றிருமாலின் னடிபோற்றுந் தென்கயிலைப் பரம வீசர், சன்னிதிக்குட் டிருவுருவில் யோகினியைச் சூலினியைத் தாபித் தோங்கும், பொன்னதிக்குன் றெனுமச்ச கேச்சுரத்தை வலம்வந்து போற்றி செய்து, பின்னகத்தி னிராமனுடன் விபூஷணனும் விடைகொ ண்டான் பெற்றி யுள்ளான். (௧௩)

உள்ளமுடன் விழிகுளிர்ந்தார் சந்திரசூ ரியர்முனிவ ரூரகராஜேனார், தெள்ளியலர் கொழித்திறைஞ்சி மண்ணுலகந் தனில்விண்ணோர் தெரி சித் துற்றார், கள்ளமுடன் கொலைகளவு கட்காமங் குருநிந்தை கைவிட் டேனோர், வள்ளலையு மடிபோற்றித் தள்ளரிய துயர்மாற்றி வணங்கி வாழ்ந்தார். (௧௪)

வானவர்கடொழுங்கோணையண்ணலையுந்தேவியையுமகிழ்ந்துமுன்னுட்
டேனலையமொழிக்கங்குற்கரிபுதல்வனன்பினொடுசெய்யசாம
கானமதனுற்றுதிக்கும்படிகரத்திற்றரித்திடுமக் †கலத்தைக்கண்டே
யானசுசங்கீதனெனுங்கந்தருவனதைக்கவர்தற்காசையுற்றான். (௧௫)

---

* "விபூஷணனும் விபூஷணனவ் விராமனென்னும்" என்பதூஉம் பாடம்.

† கலம் - யாழ்.

உற்றதொருசமயம்பார்த்துத்திருந்தவனிராமனுயர்வெண்கோலா
லீற்றபோழ்தினிற்கவர்துமானுடவடிவாகியிணையில்*கீரிப்
பொற்றுறையெய்திக்கங்காசங்கமப்புணரிநதியாடிப்பொருவிலாத
பற்றொடான்றனையேத்திவீணுகானந்தன்னைப்பண்ணினானால். (௧௬)

பண்ணுதலுஞ் சிவபிரான் மகிழ்ந்துவெளிப் பட்டுசுசங் கீத னை
ப்பார்த்து, துண்ணெனகிழ்ந்து நீவீணு கரனுய்நின் றிசைத்தமையா லோ
ங்கு மிங்ஙன், மண்ணவர்கள் புகழ்வீணு பணமெனும் பெயராக மற்றி
ப் பாங்க, ரெண்ணில்பத லமுளவிக் காட்டைவெட்டி நகராக்கென்
றியம்பிப் போனான். (௧௭)

போனவரன்மொழிப்படியச்சுசங்கீதன்காட்டைவெட்டிப்புரமதாக்கித்
தானுழிந்தவாலயங்கட்டினையுமெழில்பெறப்புதுக்கிச்சனங்கடம்மை
யானகுடியாயிருத்திநகுலேசரடிபரவியருள்பெற்றேகி
மானிலமெலாம்புகழத்தனதுலகந்தனிலடைந்துவாழ்ந்தானன்றே. (௧௮)

வாழ்வுதரு தென்கயிலைப் பெருமான்பொற் றிருக்கோயின் மவுலி
பேணி, யேழுமுகி லுங்கனக மழையுமலர் மழையுமெழு தியற்றி
நின்ற, பாழிவளை முழக்கொலியு மிமையோர்கள் பரவொலியும் பயி
ன்று வாழ்த்தச், சூழுதிரைக் கரத்திற்செ ழுந்தரளம் பொழிந்தோ
லச் சுருதி செய்த. (௧௯)

சுருதிசெயுமங்காளிலொருநாளோராயிரம்பொற்சோதிமாழுக்
குருதிபொழிமாணிக்கக்கண்ணுடிகருமையுட்கொள்வபோலப்
பரிதிகுடபாற்கடலுட்புகுந்துகுணபாலுதயம்புரிந்ததோறறங்
கருதின்முழுமாணிக்கக்கண்ணுடியைவிடுத்தகாட்சிபோலும். (௨0)

காட்சிதருந் திரேதவுகஞ் சென்றுதுவா பரயுகமுங் கலந்த வந்
நாட், சேட்கடல்சூழ் புவியனைத்துந் தொழுங்கயிலைப் பெருமான்
பொற் றிகழ்பூந் துஞ்சத், தாட்கருதும் வானவர்கண் மானவர்போல்
வந்திறைஞ்சித் தவஞ்செய் தேகு, காட்கருதும் வடமொழியின் புரா
ணநடை யிவ்வளவு நடத்தி னேமால். (௨௧)

நடமருவுதிருப்பாதர்திருப்பாதவருட்கயிலைநாதர்தோற்றத்
தொடைமருவுமெய்ஞ்ஞானச்சுந்தரன்சொற்செந்தமிழாஞ்சுருதி தன்
லிடமருவுதில்லைச்சிற்றம்பலமேமுதலெடுத்தவெத்தானத்துங் [னி
கடமருவுமமுதமெனக்காணலாமென்பதனுட்காண்மின்காண்மின். (௨௨)

---

* கீரிப்பொற்றுறை - கீரிமலை. இது யாழ்ப்பாணத்தின் வடபாலி லேயுள்ள ஓர் சிவஸ்தலம்.

காண்மின்க டென்கயிலைப் * பெருமான்றன் றிருமேனி கருது மின்கள், பேண்மின்கள் சந்நிதியிற் புகுமின்க டொழுமின்கள் பேணு மின்கள், கேண்மின்கள் கயிலாச புராணமெனுஞ் சிவகதையைக் கேளீர்க ளோரும், வாண்மின்க ளுய்மின்க ளஞ்செழுத்தை மறவாது வாழ்த்து மின்கள். (உ௩)

களபமதக்கலுழிவரையுரிசெய்தருள்கயிலாயர்கமலபாதம்
புளகமுறமனதினினைப்பவர்நயனவுதகதுளிபொழிவபோல
விளைகுகடல்பரவுதிரைவிடுவதிலையெறிதுளியோடேறுசங்க
வளையுதவுதரளநிரைசிதறிநிரைதரும்வளமைமலையினுள்ள. (உ௪)

உள்ளறிவு பொடிபடுத்துந் திரிகையெனத் திரியுமதி யுளத்தி னோடும், பள்ளமுறப் பாய்புனல்போற் சஞ்சிதத்தின் வழியொழுகும் படிவந் தீட்டிக், கள்ளவினை தீர்த்துமுத்திக் கதவெவர்க்குந் திறக்குந் தாள் கங்கை வேணிப், பிள்ளைமதி முடித்ததிருக் கயிலையரன் றாள்க ளெனப் பேச லாமே. (உ௫)

மேதினியின்மச்சேந்தியத்துண்மாசூதமுனிவிதித்தவிந்த
வாதிபுராணக்கதையுமன்றியும்பின்னடந்தகதையனேகமுண்டா
னீதியினக்கதைகருதித்தென்கயிலைத்திருப்பதியினிலைமையெல்லா
மோதுவன்செந்தமிழ்நூற்றொடைமுறையானடைமுரசேறுலகமீதே.

தேவரினம்பரவுசிவலிங்கமதுபூசிப்பத்தினமும்வெவ்வே
றாவலினாற்றாபித்தங்காசமனங்கொண்டதற்பினமுதுசெய்வா
னாவலவன்பெருந்தீவிற்கங்கைநதிக்கரையிருந்துஞாலங்காக்குங்
காவலவன்பரிதிகுலத்தொருதலைவன்மனுநீதிகண்டசோழன். (உ௭)

சோணாடுமுதலியதென்மதுரைவடமதுரையெனச்சொல்லுநாட்டிற்
சாணாடும்பிறர்க்கமையாநிலமடந்தைதனைவரைந்ததகுதியாலு
மாணாகுந்திறத்தாலுமபயனெனும்பெயராலுமையனென்றுங்
கோணாதகருணையினாலன்னையென்றும்பல்லுயிர்க்குங்கூறலாமே. (உ௮)

கூறுநவகண்டத்துச்சிவதானமனேகம்பொற்கோயிலாக்கிப்
பேறுதரமுடிதரித்தவராமதேவனெனும்பெரும்பேர்வேந்தன்
மாறில்புராணங்கேட்குமொருநாளிற்புரோகிதன்மெய் வருத்தமாகி
வீறபயனவைக்குத்தான்வாராதுமகனைவரவிடுத்தான்மேலோன். ()

வேறு.

ஏமலமச்சேந்தியபுராணக்கதையைமேலேட்டி
னூலமைத்தங்கடையாளறுவற்சிசெய்துபடியாமல்

---

* மானைத்திருமேனி என்பதூஉம் பாடம்.

ஞாலமுற்றுஞ்சிவதானக்கதைதாதைதரவின்றதற்குட்
கோலமுற்றகுறையென்றுகுமானதுபடித்தானே. (ந௦)

படித்தபொழுதிருசெவியும்பாட்டுதவுஞ்சுவையமுதங்
குடிக்குமிருநர்வாகிக்குடிகொண்டதெனக்கேட்டு
முடித்தலைநேர்கம்பித்துமுகமலர்ந்துமயிர்ப்புறங்கள்
பொடித்துளமுங்கனிந்துருகிப்புளகமெறிந்துரைசெய்வான். (நக)

செய்தவத்தின்வடகயிலைத்தன்னினுமித்தென்கயிலை
யையனுக்குப்பதியானவருங்காதைசொல்லாமற்
பொய்துனைத்தான்பொருளாக்கும்புரோகிதன்பானீமகவாய்க்
கைதவுத்தாலிப்பிபெறுங்கதிர்த்தரளம்போல்வாயே. (நஉ)

வாயிருந்துசதுமறைநூல்வளங்குலவுஞ்சீவனியும்
பேயிருந்தகாட்டிருந்துபெருந்துயரந்தீர்த்தருளும்
வேயிருந்தமணியரசர்விடுகிரணமுடியிருக்கு
மாயிருந்துதவன்பானீயவதரித்தாயரனருளால். (நந)

அரவணிந்ததென்கயிலையமரேசன்கதைநீயுங்
கரவணிந்துமொழியாமற்கட்டுரைசெய்யெமக்கென்று
பரவணியாயுயிர்க்குத்தம்பண்டிதநீயெனவனைத்துந்
திரவணையுமிட்டிருத்திச்செவிதாழ்த்தான்மனுவேந்தன். (நச)

வேந்தனுக்குமனங்குளிர்ந்துவியப்புவரவேதியன்மச்
சேந்தியமாம்புராணமதுதெரிந்துரைபபத்திறல்வேந்தன்
காந்தமுங்கூருசியும்போற்கருத்துற்றனவன்செவிக்கிப்
பேரூர்ந்தவமுதிதுவல்லாற்புறத்தமுதம்பொருந்தாதே. (நரு)

ஆதபனைக்கண்டவிருளதுபோலவஞ்ஞானஞ்
சேதமுறுமனத்தரசன்றென்கயிலைப்பெருமான்மேற்
காதலினல்மந்திரியைக்கருத்துருகியழைத்தருளி
யேதமிலாத்திரிகோணமிறைஞ்சுதும்போயினிதென்றான். (நசு)

என்றதிருமொழிகேட்டமந்திரியுமிதுமிகவு
நன்றென்றுமனுவேந்தனுடுமரசும்படையுந்
துன்றுபுதல்வருக்களித்துத்தொகுதிபலவுந்நிறுத்தி
யுன்றுமரக்கலம்புகுவானலைகடனீர்க்கரைவந்தான். (நஎ)

வந்தரசன்மந்திரியைவருகெனலுமவனும்போ
யந்தவரன்றிரிகோணத்தாலயத்திற்கனேகசிலை
சுந்தரவாரிக்கரையிற்றெருகுத்துமரக்கலத்தேற்றிச்
சிந்துவின்பாற்போந்துதன்பின்செல்வாரைநிறுவித்தான். (நஅ)

நிறுத்துமமைச்சனுந்தானுநெடியமரக்கலந்தேறிப்
புறத்துமகத்துஞ்சேனைப்பரிசனங்கள்புடைசூழல்
செறித்தகரையும்மனமுந் * திமிலிடைப்பூங்காவனத்துட்
குறித்தமலர்பதநோக்கிக்குவித்தகரத்தினிதிருந்தான். (நக)

திருந்துவடகயிலையின்முன்சேடன்மணிப்படம்விரித்துப்
பொருந்தியபின்னுமசையின்னும்பூண்டலைநீர்ப்புறம்வழியாய்
விரிந்தகிர்த்தென்கயிலைமிசைநோக்கிவருவதென
வருந்தருணப்பாய்விரித்தங்கலங்குகலம்பலவிடுத்தார். (சo)

விடுத்துவழுபதமுடைத்தாய்மென்கமலமீதோடி
யெடுத்தவிரைச்சக்காமரங்களிசைத்துப்பர்ய்தலைக்கொளவா
னெடுத்தமுடித்தென்கயிலைவிமலர்பதமலர்தேடித்
தொடுத்தெழுந்தவளியினம்போற்றொடருமரக்கலங்களெல்லாம். ()

கலனோடத்திரையோடுங்கடலோட்டங்களைகண்டு
நிலனோடுந்திசையோடுநிலவெறிக்குங்குடைவேந்தன்
புலனோடுவிழிமலர்ந்து † பூதேசன்றென்கயிலைத்
தலனோடுமனந்தொடரத்தனதுகரங்கூப்பிநின்றான். (சஉ)

நின்றிருந்தகலன்விடுத்துநெடியகரைப்புறத்திறங்கிக்
குன்றிருந்தபுயம்புளகித்தெதிரிறைஞ்சிக்கூறுவா
னன்றிருந்தீர்வடகயிலைத்தென்கயிலையடியேன்மு
னின்றிருந்தீரொன்னுளத்திலிருந்தவருநீர்தாமோ. (சங)

நீர்தாங்குபகீரதியுநிலந்தாங்குவிடதரமுங்
கூர்தாங்குமிளம்பிறையுங்குடிதாங்கிமுடிதாங்கி
வார்தாங்குமுலைத்தரளவடந்தாங்குமுமையொருபாற்
சீர்தாங்குந்தென்கயிலைத்திருப்பதியென்றவப்பேறே. (சச)

தவப்பேறுநன்பேறுந்தன்பேறுமில்லாதே
னவப்பேறுய்த்திரியாமலறிந்துதொழப்பெறும்பேறே
சிவப்பேறுமிதழமுதச்சிறப்பேறுமொழிவனிதை
யுவப்பேறுந்திருமேனியுடன்பிரியாப்பெருமானே. (சரு)

மானிருக்குமிடத்தோடும்வலத்தோடுங்கயிலையினீ
கூனிருக்குமதிமுடித்துக்குடியிருப்பதறியாம
லூனிருக்கவுயிரிருக்கவுளையிருக்கநாவிருக்க
யானிருக்கவின்றளவுமேத்தாமலிருந்தேனே. (சசு)

---

* திமில் - வேங்கைமரம்.

† பூதேசன் - சிவன்.

தேனேயுநின்மலர்த்தாடெரிசித்தேனெனதுவினை
தாவேவிட்டகன்றதெனத் * தபதிமுகமதுநோக்கி
வானேயுந்திருமலைமேன்மணிக்கோயிலியற்றுகென்று
கானேயுந்தாதகித்தார்க்காவலவனருள்புரிந்தான். (௪௭)

புரிந்தவளப்பொறிமேனிப்புண்டரிகம்பண்டுபிடித்
துரித்துவற்குத்திருக்கோயி † லுபானுதிதாபியுட
னிருத்தியருட்கயிலேசற்கியற்பூசைபுரிவித்துத்
திருத்தியபினுசமனஞ்செய்தமுதுசெய்திருந்தான். (௪௮)

செய்தவத்தினெறிதருமச்சேந்தியபுராணமது
கைதவத்தாற்கோயிலெங்குமெழுதியநற்கதைமிருந்து
மெய்தவத்தாற்பொற்றகட்டின்மேய்ந்தெழுதியாய்ந்தமையா
லையனுக்கும்பொற்கோயிலாகவுஞ்செய்தினிதிருந்தான். (௪௯)

இருந்தபுகழ்மனுவேந்தனினத்தொடுமந்திரியோடும்
விரிந்தகடற்றரங்கமெறிவெற்பினடிக்கீழ்வந்து
தெரிந்ததொருகிணறுகண்டுசெம்பொனதற்கிடைகுவித்துப்
புரிந்தபெருங்காவல்செய்துபுனிதனுக்குப்பொன்னென்றான். (௫௦)

‡ என்றனையதிருமேனியிராமதேவனுமகிழ்ந்து
நின்றான்பால்விடைகொண்டுநெடியகடல்கடந்தேகக்
கன்றமைத்தகரத்திருமால்கமலனிமையோர்முனிவர்
குன்றமுற்றபெருமானைக்குனைகழற்றுடொழுதனரே. (௫௧)

தொழுதுவரப்பரமன்னனிருகவசஞ்சூழ்ந்தெதிர்ந்த
பொழுதுகவசமுமகற்றிப்புகுதுமவனையுந்துரந்து
பழுதில்கலிமறுமன்னன்படியாளுந்கிகிரியென
வெழுதரியபரிதிகிழக்கெழுந்தபொழுதெனவிருந்தான். (௫௨)

இருந்தவஞ்செய்மனுவேந்தனியற்றியபொற்கிணற்றருகே
பொருந்தியதாதகியொன்றுபொலிந்ததவன்புரிதவத்தாற்
றிருந்தியபூதமுமதன்கீழ்ச்சிறந்ததந்தசெம்பியர்கோ
னருந்தனயற்கரசளித்துப்பரகதிபோயடைந்தானே. (௫௩)

அடைந்தவந்நாளிலங்கைவலமாகவந்தவொருமறையோன்
கிடந்தசெம்பொற்கிணற்றருகேதுயிலுதலுங்கிளர்பூத

* தபதி - தச்சன்.

† உபானம் - கோபுரத்தின் கீழ்ச்சித்திரவரி.

‡ என்று - சூரியன்.

நடந்தவனையெழுப்பியுங்கணுவலந்தீவுக்கரசன்
கடந்துட டனீந்தி முன்னிக்கயிலைமலைக்கெய்தினன். (௫௪)

எய்தியரற்காலயமுமியற்றியவர்க்கனேகம்பொன்
பெய்துகிணற்றிடைமூடிப்பெருங்காவலெனைநிறுத்தி
வையகத்திற்போந்துகலிவருதலின்முத்தியிலடைந்தா
னையவவன்புதல்வனுக்கீதறைகவெனவறைந்ததுவே. (௫௫)

அதுமொழிதன்செவிப்படலுமருமறையோன்றனியெழுந்து
முதுகடலுங்கடந்தந்தமுடிமன்னன்றனிக்குமரன்
விதிமுறைசெய்குளக்கோட்டனுடன்மறையோன்விளம்பவவன்
பதியரசுதன்மகற்குப்பாலித்திப்பால்வந்தான். (௫௬)

வந்துகடல்கடந்துகரைமருங்கணுகித்தென்கயிலை
யிந்துமுடிப்பெருமானைச்சந்நிதிசெய்தெதிர்தொழுது
புந்திநெகிழ்ந்துருகிமயிர்ப்புறம்பொடிப்பவிருவிழியுஞ்
சிந்துபுனல்பெரிதொழுகச்சிவாயநமவெனப்பணிந்தான். (௫௭)

தானேதன்றனக்கிணையாந்தனிமுதல்வியருகிருப்பத்
தேனேயுமலர்வனஞ்சூழ்தென்கயிலைமீதிருக்கு
மானேயுங்கரத்தானேவல்வினையின்குறும்பறுப்ப
யானேயமுடனிறைஞ்சவெத்தவஞ்செய்தேனென்றான். (௫௮)

தேனிலவும்பொன்னிதழிச்செழுமலரும்பகீரதியுங்
கூனிலவுமுடித்தசடைக்கோணமலைப்பெருமான்றன்
வானுலகுமண்ணுலகும்வந்துதொழத்திருப்பணிக
டானுலகிற்செயநினைந்துதமனியப்பொற்கிணறுற்றான். (௫௯)

உற்றவனைப்பெரும்பூதமெதிரிறைஞ்சியுனைப்பயந்த
கொற்றவன்றன்செப்பேடுங்குறியுமிதுவெனக்கொடுப்ப
வுற்றதனமெடுத்ததனுக்கிருமடங்கேயொளிவிடும்பொன்
முற்றுதிருப்பணிக்களித்தான்றன்கரத்தான்முடிவேந்தன். (௬௦)

வேந்தனுமந்திரியும்போய்விமலர்திருப்பணிக்காக
வாய்ந்தமலைமுறித்தசிலைவரும்படிக்குவழிவேண்டிக்
காய்ந்தவராகீகன்றலைநாளுடைத்தகடல்வழியடைத்துப்
போந்தபடிகட்டியதன்புறமேறித்தெரிசித்தான். (௬௧)

தெரிசித்தான்கலியுகநாட்சென்றமறைவானவனொன்
றெருசித்தம்பாசுபதமறையோனாயுரவோனும்

*பாசித்தான்வணங்கிப்பஞ்சாக்கிரணாகமத்தின்வழி
புராசித்தம்பூண்டவரைப்பூசனைசெய்துய்மினென்றான். (கூஉ)

என்றுமகாமண்டபமுமெழின்முதன்மைமண்டபமுங்
குன்றனையகோபுரமுங்கோவில்பலசாலைகளு
நன்றிபெறவமைத்தருளிநாயகிக்குப்பொற்கோயில்
வென்றிபெறச்சமைக்கவேண்டுமெனவுரைசெய்தான். (கூ௩)

உரைசெய்தபடிதவறாதுயர்ந்தபடிகுலத்தவர்பொன்
வரைசெய்ததெனக்கோயின்மண்டபஞ்சூழ்மதில்செய்தார்
† பிரைசெய்தவமுதமொழிப்பிடியன்னமென்னடையைத்
தரைசெய்தபுண்ணியம்போற்றாபித்தான்மனுவேந்தன். (கூச)

தன்னுன்மைக்குவமையிலாத்தனிவேந்தன்வடகயிலை
யின்னேவந்துருவடைனத்தென்கயிலைக்குவேண்டுமெனப்
பொன்னுருஞ்சிகரமும்பொற்கோபுரமும்பொருத்தியதற்
புன்னாகங்கவித்ததெனமவுலிகளும்பலசெய்தான். (கூரு)

செய்தபடிக்காயிரம்பொன்றென்கயிலைமீதிருக்கு
மையர்தமக்களித்தருளியலங்காரநிலங்கொண்டு
வையகமெண்ணாயில்சூழ்மணிக்கோயிலியற்றியதிற்
றுய்யதிருமாயனையுந்தாபித்தான்றொடைமார்பன். (கூசு)

தொடைபுனைவேதியர்முதலாந்தொல்லோர்க்குமெல்லோர்க்கும்
படியில்வினைப்பயந்தீர்க்கும்படிபாவநாசமெனும்
தடமதுகண்டதற்கருகேதனிமுதல்வனீராடு
மிடமருவுமண்டபமுமியற்றுவித்தான்சேய்தருமன். (கூஎ)

தருமநெறிதவறாததனிவேந்தன்சிவபூசைக்
கருமநெறிபுரிவதற்குக்கலைமறையோர்தவமுனிவர்
வருபவர்வந்தாறுதற்குந்தனக்கொருமாளிகையாகப்
பெருமதியந்தவழ்மாடகூடங்கள்பெரிதமைத்தான். (கூஅ)

அமையாததரங்கமெழுந்தார்ப்பரிக்குங்குணகடலுஞ்
சமையாவக்குடகடலுஞ்சந்திப்பப்பர்தித்துச்
சிமையாதிமலைநிறுத்துஞ்செய்கையெனமதிணிறுத்தி
யெமையாளுங்கயிலாயற்கெவ்வகையுஞ்செய்தமைத்தான். (கூகூ)

‡ அமையனையதிருத்தோளினணங்குபிடியன்னநடை
யுமையையுமெநாயகனையொளிபெறவேதொழுதேத்திச்

---

* பரசல் - துதித்தல்.
†‡ பிரை - பங்கு. அமை - மூங்கில்.

சமையமுதலாகியமெய்ச்சைவநெறிதழைத்தோங்கச்
சிமையமுடித்தென்கயிலைத்திருமலைக்கீழினிதிருந்தான். (௭0)

இனிதிருக்குநர்நாளிலெந்நாளுந்திருப்பணிக
ணனிதிருத்தித்தென்கயிலைநன்னகருந்திருத்துவித்துக்
கனிதிருத்துமலர்க்காவுங்கடிதிருத்துமணிமறுகும்
பனிதிருத்தும்புனல்வாவிபஃறடமும்பயில்வித்தான். (௭௧)

வித்தகஞ்சேர்மலர்ச்சோலைமென்பீலிபசுங்கலப
மத்தர்திருக்கோபுரந்தன்னணித்தலையின்மணிச்சூடு
வைத்தகயிலையின்வாயில்வாய்ப்புரிசைவயிமிரண்டு
பைத்தலையக்கடல்சிறகாய்ப்பயிலுமலைமயில்போலும். (௭௨)

மயிலினங்கணடமாடமதுகரங்கள்சுருதிசெய்யக்
குயிலினங்கள்குழலிசைப்பக்குளிர்கவரிகமுகசைப்பப்
பயிலிதழிபொன்னளிக்கப்பசுஞ்சோலைதலைதுளக்கக்
கயிலைமலையிருந்தவளங்கவிதையுளாக்கடங்குமதோ. (௭௩)

உளைத்தவளக்கோடுலவவோதுகளுந்தாரமுற
நிளைத்துலவுகாலசைப்பநிறையேரிதணியுலவு
வளைக்கலைவெண்மதியுடையாரனுதினமுமிருப்பமறை
* யிளைத்தபெருங்கோணகரிடபமெனவுளைசெயலாம். (௭௪)

உளைவிரிந்தமறையோர்களோமவனன்முன்னிருத்தி
நிளைவிரிந்தகனன்மீதுநிறைத்தபலவாகுதியால்
விளைவிரிந்தமலர்க்காவின்மீதெழுந்தபுகைப்படலங்
களைவிரிந்தகடலருந்தக்கனம்விரிந்ததெனலாமே. (௭௫)

ஆமேயவிலைதேடியண்ணுந்துபலகூடிக்
காமேவுமலர்ப்புன்னைக்கடிநிழல்சூழுந்நேரம்
பூமேவுமதிலொருவன்புனிதனுளனதனுலுங்
கோமேதகமாலுங்குருந்துமடவாருமொக்கும். (௭௬)

குடத்தலையமலர்க்கோங்கின்குளிர்தாதையறுதாளா
லுடைத்தவளியினஞ்சோலையூடெழுந்துதிரிவதெல்லாங்
கடைத்தலையோர்தமைநீக்கிக்காவலர்கண்ணலர்ந்தவர்பால்
விடுத்தபலதுதொழும்விளைவெனவுமுளைசெயலாம். (௭௭)

செய்யவிதழ்ச்செங்குவளைச்சிறுதாளின்மீதுயர்ந்த
துய்யமலர்க்காயாவிற்சூழ் † தோன்றியலர்சொரிதேன்

* ஓளைத்தல் - ஒலித்தல். † தோன்றி - காந்தள்.

பையரவின் றுயின்மாயன் பங்கயச்செங்கரமதனை
னெய்பொழியுந் தழல்வேள் விரிகர்க்குமலர்க்காவினமே. (எஅ)

இனமின்முன் செலும்பறவையிருங்காணில்விழுந்தாற்றத்
தனதனவென்றளிபாடத் தமரமறுத்தலைத்தபடி
கனகமுடிமனுவேந்தன் கூற்சேனைப்பலகுலமும்
வினவுமொதிரமொழிபோலவிரவுமிளம்பூங்காவே. (எகூ)

பூங்கதலிக்கரும்பினஞ்சூழ்பொன்மாடத்திழையவெயி
ருங்கியபின்சிறகோதித்தலைமடங்கும்பெடையன்னம்
பாங்கிருந்தவெகினமணம்பாவித்ததென்றெண்ணி
மாங்கனியின்சாறெறிந்துமஞ்சளவிளையாடுமந்தி. (அ0)

மந்திரியின்முகங்கோட்டாமலர்ந்தமுகவரசனிடைப்
புந்திமகிழ்கவிபாடிப்புகும்புலவொனலாமால்
முந்தமலர்முகந்தோற்றமுதுபலவிற்செல்லாது
கந்தமலர்முகங்காட்டுங்கமுகிலளிசெல்வனவே. (அக)

வெந்தாருங்காவலிடவேண்டேமியாங்காமனென்றுந்
தேய்ந்தவிளம்பிறைமுடித்ததிருவடிக்காமலரென்றும்
வாய்ந்தகுமிற்சின்னமுந்தின்மலர்ப்படையும்வைத்ததனுட்
போந்தபெருஞ்சோலையெங்கும்புகுந்துமதன்காப்பிடுவன். (அஉ)

வேறு.

காப்பிட்டலர்வாயளியினங்கள்களிகொண்டசோகின்மலர்பாய
மீப்பட்டன்னமேற்பாய்ந்துவெடிக்கும்பலவின்சுளைத்தேனும்
பூப்பிட்டொழுகும்பசுந்தேனும்பொழிந்துபதைக்கும்வானரங்கள்
கூப்பிட்டயலாக்தரைப்பவர்போற்குயிலுமயிலுங்குரல்காட்டும். ()

காட்டுங்கதலிக்கொழுங்கனியுங்கமுகின்கனியுமாங்கனியுங்
கோட்டின்பலவின்சுளைக்கனியுங்கூட்டிக்கறியின்கொடிவீழ்ந்து
நாட்டின்கரும்பின்பணையொடித்துநறுநீர்வாவிதொறுஞ்சிதறித்
தோட்டின்கமலமலர்ப்பொகுட்டுத்துயில்வண்டெழுப்புந்திருநாடு. ()

நாடுங்குழக்கன்றினைநினைந்துநடந்துகுறுந்தாட்கருமேதி
யோடுங்கழியிற்சுரந்துமுலையொழுகும்பாலிற்புதுவெள்ள
மேடுங்குவளைக்குழியினமும்விரவிப்பாயக்கயல்குதிகொண்
டாடுமுயரங்கண்டுவெருண்டகலுமுகிலும்வானெல்லாம். (அரு)

வானுமிளிருமுடுவினமும்மதியும்போலப்புதியதளிர்க்
கானுமலருமீம்பளிக்கறையுங்கலந்துவசந்தப்பசுந்தென்ற

றேனுந்தோமேம்புளினமுறச்சிதறுஞ்செவ்வித்திரிகூடந்
தானுமருச்சித்தடியிறைஞ்சுந்தகைமைத்தென்னவிளங்கியதே. (அசு)

விளங்குமிளங்காவனஞ்சூழ்ந்துவெயிலின்கிரணம்படாதபுவி [ன்
தளங்கும்படிவெண்ணிலவெறிக்குந்தனிவெண்குடையான்மனுவேந்த
களங்கமடியார்க்கிலையாக்குங்கயிலைப்பெருமானடிபணிந்து
வளங்கொளிலிங்கந்தமக்கொன்றுவைத்துப்பணியுமந்நாளில். (அஎ)

அந்நாணன்றுளெந்நாளுமாகப்புவனிவளஞ்சிறப்பப்
பொன்றுரிதழிக்கயிலாயர்பூசைக்குதவும்பொருட்டாக
விந்நாடனைத்தும்விளைவதற்குக்குளமொன்றியற்றியிருப்பமென
மன்னுவதுநன்றெனப்பலரும்வழுத்தமன்னன்கடிதெழுந்தான். (அஅ)

எழுந்தானதற்காமிடநோக்கியெறிநீர்நதிபோய்மலைதாக்கும்
கொழுந்தாமனேகங்காதவழிகோலிப்படிக்கற்கரைதிருத்தி
விழுந்தாரையினீர்மதகினுக்குவிடுத்தல்பிடித்தலுறுபயிற்றிச் [ன்.
செழுந்தாரையினீர்க்குளங்கயிலைச்சிவனுர்க்கெனக்கல்லெழுதிவைத்தா

எழுதுமுழுவைக்கொடிபடருமிமையம்பொதியநடுவிட்ட
முழுதுந்தனதுகுடைநிழற்றுமுதல்வன்கயிலைப்பதிமீண்டு
பொழுதங்கவமேபோகாமற்புனிதன்கயிலைப்பெருமானைத்
தொழுதும்புகழ்ந்தும்புராணகதைசொற்றுங்கற்றுமினிதிருந்தான். ()

வேறு.

திருந்துமவ னிவ்வண்ண நெடுநாள் வாழ்ந்து திருப்புதல்வற் கா சளித்துச் சிவன்பொற் பாதத், தருட்டுணையே துணையெனசசென் றடைந்தா னன்ன வன்மரபி லொருசிருப னறிவி லாமை, பொருந்தி யனு ராசபுரி யென்னும் பேரூர் புகுந்துகயி லையைமறந்து புவனி யாண்டு, மருந்தனைய சிவசமயந் தணந்து புத்த மார்க்கமெனும் பெரும் பாவ வழியிற் புக்கான். (கூக)

காணிருந்த தாதகித்தார் கமழு மார்பன் கயவாகு மென்னுமந்தக் கழற்கால் வேந்தன், றுணிருந்த நெறியடைவே யிலங்கை யெங்குந் தனிக்குடைக்கீழ்ப் புரக்குமந்தத் தகைமை நோக்கி, வானிருந்து வருந்தவள வரசு தன்னை மணியிருந்த பொற்கரத்தால் வாங்கி வைத்துத், தேனிருந்த சிறீசங்க போதி யென்னுந் திருநாமந் தரித்தரசு செலுத்துங் காலம். (கூஉ)

கரலினைமுன் னுதைத்தகறைக் கண்டர் கோயிற் கயிலைமலைக் கெதிர் மலையிற் * கணமுண் டாக்கிச், சீலமிகும் புத்தரைச்சித் திரித்து வாழ்

* கணம் - கூட்டம்.

நாட் சிவனடியார் பூவெடுத்துச் செல்லுங் காலைப், பாலருந்தச் † சிவ கர்கள் பலருங் கூடிப் பறிப்பதனுற் ‡ பாசுபதர் பலரும் போந்து, வே லைதனி லவனைவிழ விட்டா ரந்த வெம்மொழியை வேந்தனுக்கு விள ம்பினுரே. (௬௩)

விளம்புமொழி யினையுணர்ந்து வேந்தன் பொங்கி விழியிரண்டுங் கனல்பொழிய வெகுண்டு வேணிக், களங்கமதிக் காபாலி கயிலை யெங் கோன் கணமாக வகுப்பனெனக் கருத்தி லுன்னித், துளங்கலிலாச் சதுரங்கப் படையினேடுந் தொடருநலுங் கயிலைமலைச் சோதி நோ க்கி, யுளங்கனிவில் லாவரசன் கண்ணிற் சோதி யொளியிருளுத் திருவு ளத்தி லெண்ணி நின்முன். (௬௪)

நின்றகலாக் கண்ணிருள நிருப னெஞ்சு நினைவுமறந் தவசமுற நேரங் கோனைக், குன்றிறையோ னொருமறையோன் போன்முன் னெ ய்திக் கொடுத்திடவத் திருநீற்றைக் கோமான் வாங்கித், தன்றகைய நெறிபேர்ந்து சிவசி வாய சங்கரவென் றுரைத்துநுதற் றரித்த காலை, யின்றருகு நின்றபுத்தர் பலரு மானீத் தறிவழிய வொருவிழிநன் றுன தும்மா. (௬௫)

அம்பரத்திற் கதிரிரவி யுதிக்குங் காலை யலர்மதிய மழுங்குதல்போ லரிய நாட்டஞ், செம்பதும முகத்தொன்று விளங்க வொன்று செறி யிருளாய் நின்றதிதெய் வீக மென்று, கும்பிடுதல் செய்தரனு திருவெ ண்ணீற்றைக் குழைத்திடுதல் செய்தெவருஞ் சைவமினென்முன், பம்புபுனல் வளநாட்டிற பாய...ன்னு பார்த்திபன்செய் குளநோக் கிப் பரவா நின்முன். (௬௬)

நோக்கியதன் கண்டமைந்த கார ணத்தா னுவல்பெருங்கல் ட மையென்ற தறகு ணுட்டி, யாக்கினனித் திருக்குளமு நகரு நாடு மர னுர்க்குக் குளக்கோட்ட னவன்முன் செய்த, பாக்கியநன் றெனமன்ன னுவந்தா னந்தப் பாசுபதர் பவுத்தாது குற்ற மெல்லா, நீக்கியொரு திரிகோணப் பெருமான் மேனி நிருமலத்தி னொருமையெனு நெறியிற் சூழ்ந்தார். (௬௭)

சூழ்ந்திடுமக் கயிலையினுற் புறமும் வேலை சுழித்தெறிந்த திவலை மலைச் சுற்று முற்றும், வீழ்ந்தவர்தம் முடலெடுத்துக் கடவுட் டீர்த் தம் விரவுதனு மன்னிலைமை வினவி வேந்த, னுழ்ந்தபெருந் துயராகி புருகி மெய்சோர்ந் தரகரவென் றழுதரற்றி யார்வ மோடுந், தாழ்ந்தே

† சிவகர் - பௌத்தர்.
‡ பாசுபதர் - பாசுபதசமையத்தவர்கள். இது உட்சமயமாறி னென்று.

சடை முடித்தவர்சந் நிதிசேர்ந்தான் சங்கார்மற் றிருகண்ணுந் தந்தா ரங்கண். (கசு)

அன்னவிரண்டொருக் கண்ணுங் கயவாகு பெற்றுபய கரங்கள் கூப்பி, யெண்ணிரண்டு கலைமேலு மிரண்டா யொன்று யிருந்தபரா பரப்பொருளை யிறைஞ்சி யேத்தி, யண்ணலருச் சனைக்கென்றே யயருங் காலத் தலைகடலைக் கடந்திருவ ரந்த ணாளர், நண்ணினரொன் றனரவரைக் கொணர்மி னென்று நுதனருச் சனைக்கிவரோ நல்லோ ரென்றான். (கசஎ)

என்னுமரா னருச்சனைக்கு மிக்கோ ரொன்னு விப்பதியின் மூதன்மை யிருவோர்க்கு மீந்து, வென்றிதரு நமதுகுலக் குரவோ ராகி விளங்குமெனக் குருவரிசை மிகவு நல்கிக், கன்றுபலவு வெருகுநதி தருப்பையாறுங் காம்பகநீர்க் கடலளவுங் கணித்த வெல்லை, துன்றுதிசை நான்குமரன் றனக்கே யென்னச் சொல்லுமவன் கல்லெழுதித் துலங்க வைத்தான். (கஎ0)

வைத்தொருவர் புதைத்தநிதி முழுதுங் கோண மலையரற்கே யுரிமையித்த வளநாட் டுள்ள, கத்துகடல் வளமுமலை வளமு மற்றைக் கனைவளமுங் கழிவளங்கான் வளமு மெல்லாம், பத்தினிலெட் டுங் கயிலைய பரற்கு மிக்க பங்கிரண்டு முங்களுக்கே பகுதி யாமென், றெச்சிசையும் புகழனுரை வேந்தன் செப்பெ டெழுதியவா கைக்கொடுத்தா னின்ப மாக. (கஎக)

ஆகமமா னெறிமுறையே யுதய முச்சி யத்தமய மாமபர மத்த யாம, மோகைதரு நாறகுலமு மினிமை கூர வுவமையிலா வரன்றனக்கு முவகை சேர, மாகவளப் புழைப்பணைக்கை முக்க ணல்வாய மதகளிற்றை முன்பூசை வழுத்தி யந்த, நாகநதி மதிமுடித்த கயிலை நாதர் நயந்தசிவார்ச் சனை யதி நடத்து வித்தான். (கஎ௨)

கடனவிதந் தருபாத நளினந் தாழ்கு நமனையுதைத் தெமையாள நயந்த நீலக், கொடியிடது புறமாகப் படரு மேனிக் கோணமலை நாதருக்குங் கொண்டல் போலுங், கடகளுழிக் கரிமுகன்முன் போகக் காளக் கடலொலிப்பப் பங்குனியுத் திரநாட் கன்னி, மடமகளிர் கவரியிட மறையோர் வாழ்த்த வயங்குதிரு நாளுலாம் வாழச் செய்தான்.()

செட்டோறு நிரம்புமுத்தங் குரம்பு தோறுந் திரண்டிருந்தத் தமத்தர் கோண நாதா, லபதோறு மணிக்கிரணம் பரந்து பாயும் பரந்தண்முடித் திருமேனிப் படிவ நோக்கி, மெய்தோறுங் கண்படைத்தாற் போல நின்று விழிதோறும் புனறுளிக்க விழுந்து போற்றிக்,

* அனுரை - அனுராசபுரம்.

கைதோறு மேந்திமல ரீசன்செம்பொற் கழறோறுஞ் சொரிந்துநின் றுன் கருணை வேந்தன். (௧௦௪)

தன்னிகரி லாததிரு மலையி னூடே தகையதொரு பெருமுழக்கந் தமரித் தோங்க, மன்னனிது பெருமுழக்க மென்கொ லென்று மறைமுதன்மை யிருவரையு முதனோக்க, வின்னதிருத் தெய்வமலைக்குக் கீழே யெம்மா னினியதிருக் கங்கைநதி யிருப்பச் செய்தா, னந்நதியிற் றீர்த்தஞ்சேர்ந் தயன்மால் வானோ ரருமுனிவர் துதிட்டதென்றா ரத்திறலோர். (௧௦௫)

அந்தமொழி கேட்டரச னருணைகாலத் தலர்கமல மலர்முகமன் பொழுது நோக்கிச், சுந்தரமா மறைமுதல்வீ ரிங்கே கங்கை தோன்றி யதொலை கதையெமக்குச் சொல்வீ ரென்னக், கந்தவட கயிலையிற்பன் டெயபிரானைக் கவுரியவிர் சடைக்காததால் வகிரக் கங்கை, சிந்தை வெரு விடக்கடவு ளிரங்கித் தன்கைச் சிறுநகத்தால் வாங்கியிங்கே திகழ வைத்தான். (௧௦௬)

வைத்தகங்கை யரன்பதமீ தோங்கி யேந்து மலையருவி பரவிமா வலியுஞ் சூழ்ந்து, மொத்தமெறி காவிரியின் முகமு மாய முந்தியகட னடுவினிது முழக்குங் காலை, யுத்தரவான் கயிலைமுடி யுடன்வந் தீச னுலவு மதனிடைத்திருத்தா னுருவன்றி நின்றான், சுத்தமிது கதைதென்பாற் கயிலை யென்றே சொல்வரொன் றூர்சைவச் சுருதி வல்லோர். (௧௦௭)

சுருதிமறு நெறிதவறுப் பரிதி வேந்தன் றொல்குலத்து முழுமுது ல்... தோன்றுள் வந்த, திரு...ற் புனன்முகந்து பெருமான் றிங்கட் சென்னியுற வபிடேகஞ் செயயி லாவுன, வருமறையோர் திருமலையிற பிலத்து ளேகி யுந்தநதித் தீர்த்தமெடுத் தன்பா லெய்தி, மதிமுடியி லபிடேகஞ் செய்யக் கண்ட மன்னவர்கோ னுளமகிழ்ச்சி மதிக்கற் பாற்றோ. (௧௦௮)

பாற்கடலு ளிருந்ததிரு மாலோ வல்லன் பரிமளத்தேன் சொரி பதுமத் தயனோ வல்ல, னூற்கவர்வென் கோட்டயிரா வதத்தோ னல்ல னராதிபனோ வல்லனெனும் பெருமை நண்ணிக், காற்குமுவுங் கமலத்தன் சென்னிக்கீசன் கவித்தமுடி யெனப்பெரிதுங் கருதிப் போற்றி, மேற்பிறப்புக் கொருமருந்தாய்ப் புனிதன் றீர்த்த மிகவேந்தி யகந்தனிரா விந்தஞ் சேர்ந்தான். (௧௦௯)

சேர்த்தநதித் தளிமுடிமேற் சேர்த்து மன்னுஞ் சிவனடியை வணங்கியுளத் தியானித் தன்று, தீர்த்தமறுத் தெழுமுகிலுங் கனகம் பெய்ய நிலைமையெனத் தசதான நிதமுஞ் செய்து, பார்த்ததிரு வருட்பாரா வையெய் பிரானைப் பணிந்துவிடை கொண்டனனைப் பயிபுட் பக்

கர்ன், பூத்தராணி திருபரொல்லா மதனைக் கேட்டுப் பூசனைவெவ் வேறு பயம் புரிந்து வாழ்ந்தார். (கக0)

வேறு.

ஆக்கலாமழிக்கலாமண்டம்யாவையுங்
காக்கலாங்கடையுகங்கடந்துநிற் லா
மேக்குலாந்தென்கயிலாயமேவினார்
பூக்குலாந்திருவடிபுகழ்ந்துவந்தித்தால். (கக௧)

வரந்தருதென்கயிலாயமன்னிய
சிரந்தாள்ளிணைநினைந்துவாழ்த்துவார
புரந்தரனிமையவர்போற்றநீள்விணை
துரந்தரனுவதுஞ்சொல்லவேண்டுமோ. (கக௨)

வேண்டியமுத்தியின்விருப்பமீக்கொள
வீண்டொருபுராணமதென்றிசைத்தனன்
காண்டகுமுணர்விலிக்கவிதையேனுமின்
றூண்டைக்கண்பினலருத்தியாவதே. (கக௩)

தேனெனவமுதெனச்சிறக்குங்கல்விய
மானசாற்கவிதையுமறனுமோங்குக
ஞானமுஞ்சுருதியுநலனுநீதியுந்
தானமுந்தருமமுந்தழைத்துண்டாகவே. (கக௪)

ஆகமநெறிகளுமந்தணாளரும்
யோகமும்வளருகவுலக ீ க
மேகமுஞ்சைவமும்மேவியோங்குக
போகமுந்திருவொடுபொலிந்துவாழ்கவே. (கக௫)

வாழிதென்கயிலையம்பொருப்பும்வையமும்
வாழியவன்பர்தங்கணமும்வானமும்
வாழியஞ்செழுத்தொடுவளமுநீதியும்
வாழியதொண்டர்சீர்வாழிவாழியே. (கக௬)

திருநகரச்சருக்கம் முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௬௧௨.

---

தக்ஷிணகைலாசபுராணம்
முற்றிற்று.

உ

சிவமயம்.

# திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம்.

## திருக்கோணமாமலை.

பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

நிரைகழலரவஞ்சிலம்பொலியலம்புநிமலர்நீறணிதிருமேனி
வரைகெழுமகளோர் பாகமாயப்புணர்ந்த வடிவினர்கொடியணிவிடை
கரைகெழுசந்துங்காரகிற்பிளவுமளப்பருங்கனமணிவரன்றிக் [யர
குரைகடலோதநித்திலங்கொழிக்குங்கோணமாமலையமர்ந்தாரே. (க)

கடிதெனவந்தகரிதனையுரித்துவவ்வுரிமேனிமேற்போர்ப்பர், பிடி
யனநடையாள் பெய்வளைமடந்தை பிறைநுதலவளொடு முடனாய்க்,
கொடிதெனக்கதறுங்குரைகடல்சூழ்ந்துகொள்ளமுனித்திலஞ்சுமந்து,
குடிதனைநெருக்கிப் பெருக்கமாய்த்தோன்றும் கோணமாமலையமர்ந்
தாரே. (உ)

பனித்திளந்திங்கட்பைந்தலைநாகம்படர்சடைமுடியிடைவைத்தார்
கனித்திளந்துவர்வாயக்காரிகைபாகமாகமுன்கலந்தவர்மதின்மேற்
றனித்தபேருருவவிழித்தழனாகந்தாங்கியமேருவெஞ்சிலையாக்
குனித்ததோர்வில்லார்குரைகடல்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரே.

பழித்திளங்கங்கைசடைமுடிவைத்துப்பாங்குடைமதனனைப்பொ
டியா, விழித்தவன்றேவிவேண்டமுன்கொடுத்தவிமலனார்கமலமாரபா
தர், செழித்துமுன்னரற்றுஞ்செழுங்கடற்றரளஞ் செம்பொனுமிப்பியு
ஞ்சுமந்து, கொழித்துவன் றிரைகள்கரையிடைச் சேர்க்குங்கோணமா
மலையமர்ந்தாரே. (ச)

தாயினுநல்லதலைவரென்றடியார்தம்மடிபோற்றிசைப்பார்கள்
வாயினுமனத்துமருவிநின்றகலாமாண்பினர்காண்பலவேடர்
நோயிலும்பிணியுந்தொழிலர்பானீக்கிநுழைதருநூலினர்ஞாலங்
கோயிலுஞ்சுனையுங்கடலுடன்சூழ்ந்தகோணமாமலையமர்ந்தாரே. (ரு)

பரிந்துநன் மனத்தால் வழிபடு மாணி தன்னுயிர் மேல்வருங் கூற்றைத், திரிந்திடா வண்ண முதைத்தவற் கருளுஞ் செம்மையார் நம்மையா ளுடையார், விரிந்துயர் மௌவன் மாதவி புன்னை வேங்கைவண் செருந்திசெண் பகத்தின், குருந்தொடு முல்லை கொடிவிடும் பொழில்சூழ் கோணமா மலையமர்ந் தாரே. (௭)

எடுத்தவன்றருக்கை யிழித்தவர்விரலா லேத்திடவாத்தமாம் பேறு, தொடுத்தவர்செல்வந் தோன்றியபிறப்பு மிறப்பறியாதவர் வேள்வி, தடுத்தவர்வனப்பால் வைத்ததோர்கருணை தன்னருட்பார்வையும் வாழ்வுங், கொடுத்தவர்விரும்பும் பெரும்புகழாளர் கோணமாமலை யமர்ந்தாரே. (௮)

அருவராதொருகை வெண்டலையேந்தி யகந்தொறும் பலியுடன் புக்க, பெருவராயுறையு நீர்மையர்சீர்மைப் பெருங்கடல்வண்ணனும் பிரம, னிருவருமறியா வண்ணமொள்ளெரியா யுயர்ந்தவர்பெயர்ந்தந ன்மாற்குங், குருவராய்நின்றார் குரைகழல்வணங்கக் கோணமாமலை யமர்ந்தாரே. (௯)

நின்றுணுஞ்சமணு மிருந்துணுந்தேரு நெறியலாதனபுறங் கூற, வென்றுநஞ்சுண்ணும் பரிசினரொருபால் மெல்லியலொடுமுட னாகித், துன்றுமொண்பௌவ மவ்வலுஞ்சூழ்ந்து தாழ்ந்துறுதிரைபல மோதிக், குன்றுமொண்கானல் வாசம்வந்துலவுங் கோணமாமலையமர்ந் தாரே.

குற்றமிலாதார் குரைகடல்சூழ்ந்த கோணமாமலையமர்ந் தாரைக், கற்றுணர்கேள்விக் காழியர்பெருமான் கருத்துடைஞானசம்பந்த, னுற்றசெந்தமிழார் மாலையீரைந்து முரைப்பவர்கேட்பவ ருயர்ந்தோர் சுற்றமுமாகித் தொல்வினையடையார் தோன்றுவர்வானிடைப் பொலிந்தே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இந்நூல் அச்சிடுதற்குத் திரவியோபகாரஞ்செய்த.

கண்ணியசீலர்களின் நாமாதிகள்.

---

| | Occupation. | Rs. | No. |
|---|---|---|---|
| S. Namasivaya Mudaliar. | | 10 | 0 |
| S. Mayloe Pillay Mudaliyar. | Shraff C. M. B. | 10 | 0 |
| P. Coomarasawmy. | Proctor S. C. | 10 | 0 |
| P. Arunachalam. | Piscal and act Reg. General | 10 | 0 |
| C. Kadiruvaloo Pillai. | Shraff New O. B. C. | 5 | 0 |
| W. Sangara Pillai. | Broker. | 5 | 0 |
| T. Suppe[illegible]amaniam. | Broker. | 5 | 0 |
| C. Tambyah. | Shraff. N. B. of I. | 5 | 0 |
| N. Aroomogam. | Broker. | 5 | 0 |
| [illegible] K. Sinnyah. | Clerk, G. P. O. | 2 | 50 |
| A. Dharmalingam Pillai. | P. Sergt. Detective Branch. | 2 | 50 |
| S. R. M. | Broker. | 2 | 0 |
| [illegible]uttu Tamby. | Do. | 2 | 0 |
| V. Ponnusawmy. | Contractor. | 2 | 0 |
| R. Suppiah Naido | P. Constable. | 2 | 0 |
| A. Cannappa Pillai. | Clerk E. Dept. | 2 | 0 |
| [illegible] arker. | Interpreter S. C. | 2 | 0 |
| A. Tambiah. | Broker. | 1 | |

இவர்கள் நன்றியென்றும் நினைக்கத்தக்கது.

இங்ஙனம்

கா. சி.

ஒப்பமிட்டவர்கள் பெயர்கள்.

## திரிகோணமலை.

| | பிரதியின்றொகை. | | பிரதியின்றொகை. |
|---|---|---|---|
| கா. பஞ்சாட்சரக் குருக்கள் | க | த. பொன்னையாபிள்ளை | க |
| கா. சபாரத்தினக் குருக்கள் | க | இ. முத்துக்குமாரபிள்ளை | க |
| சு. முத்துக் குருக்கள் | க | வெ. செ. சின்னையாபிள்ளை | [illegible] |
| க. கதிர்காமக் குருக்கள் | க | [illegible] திரித்தம்பி | க |
| இ. முத்துசாமி ஐயர் | க | க. இராமலிங்கம் | க |
| சு. சோமசுந்தர ஐயா | க | க நாகரத்தினபிள்ளை | உ |
| இ. பொன்னுச்சாமி ஐயா | க | ந. தம்பையா | க |
| ப. சோமசுந்தர ஐயா | க | சு. கோணமலை | க |
| மு. கனகசபாபதி ஐயர் | க | வை. தில்லையம்பலம் | க |
| வெ. செ. கனகசபை முதலியார் | க | மு. கதிரேசபிள்ளை | க |
| த. வேலுப்பிள்ளை வன்னியனார் | க | கா. பரமநாதர் | க |
| த. முத்துக்குமாரவன்னியனார் | க | மு. வேலுப்பிள்ளை | ரு |
| சு. அம்பலவாணபிள்ளை வன்னியனார் | க | பொ. வேலுப்பிள்ளை | க |
| | | வே. நல்லதம்பி | க |
| அ. தாமோதரபிள்ளைஉடையார் | க | க. தம்பையா | [illegible] |
| சித்திரகவி பெருந்துறை உடையார் | க | வ. பொன்னையா | க |
| | | ம. சோமசேகரம்பிள்ளை | க |
| சி. முத்துக்குமாரு | க | சு. செல்லையா | க |
| சி. கோணமலை | க | மு. கதிர்காமத்தம்பி | க |
| வெ. செ. அப்பாசாமி | க | [illegible] வேலுப்பிள்ளை | ய |
| கோ. கனகசபை | க | இ. வைத்திலிங்கம் | க |
| க. கதிர்காமத்தம்பி | க | த. செல்லத்துரை | க |
| க. கனகசபை | க | க. வேலுப்பிள்ளை | க |
| வி. விசுவநாதர் | க | சி. சண்முகம் | க |
| ந. அருணசலம் | க | சு. இராமு | க |
| வெ. செ. அருணசலம் | க | ஆ. வேலுப்பிள்ளை | க |
| க. வல்லிபுரம்பிள்ளை | க | ஆ. குமாரவேலு | க |
| மு. சதாசிவம்பிள்ளை | க | ஆ. இளையதம்பி | க |
| க. [illegible]பிறைசூடிபாகர் | க | சு. சின்னத்தம்பி | க |
| ச. செகநாதபிள்ளை | க | கு. முருகேசு | க |
| க. [illegible]பிள்ளை | க | சி. விசுவநாதி | க |
| சி. கதிர்வேலுப்பிள்ளை | க | கா. அம்பலவாணபிள்ளை | க |
| மு. சுப்பிரமணியம் | க | த. கனகரத்தினபிள்ளை | [illegible] |
| மு. முருகேசபிள்ளை | க | மு. மயில்வாகனம் | க |
| சு. தாமோதரம்பிள்ளை | க | சு. சுப்பிரமணியபிள்ளை | க |
| தா. செல்லப்பா | க | சு. மு. கனகரத்தினபிள்ளை | க |
| மு. சபாபதிப்பிள்ளை | க | உ. அண்ணாமலை | க |

| பிரதி யெண்ணிக்கை. | |
|---|---|
| பெ. வேலுப்பிள்ளை | க |
| க. கார்த்திகேசு | க |
| வ. கோணமலை | க |
| கு. சித்ததம்பி | க |
| வ. தம்பிமுத்து | க |
| சி. இராமுப்பிள்ளை | க |
| கா. சுப்பிரமணியம் | க |
| சோ. சின்னத்தம்பி | க |
| க. கதிரேசபிள்ளை | க |
| கா. கணபதிப்பிள்ளை | க |
| இ. சந்திரசேகரம்பிள்ளை | க |
| வி. சங்கரப்பிள்ளை | க |
| ச. தம்பையாபிள்ளை தமிழாசிரியர் | க |
| ந. தம்பிமுத்து | க |
| வெ. கெ. ஆறுமுகம் | க |
| A. Coomaroe | 1 |
| C. Murugasoe | 1 |
| S. Morg per | 1 |
| S. Caderi amby | 1 |
| C. Chinniah | 1 |
| S. Ponniah | 1 |
| C. Poopalla Pillai | 1 |
| N. Chellappah | 1 |
| S. Thellappon | 1 |
| P. Somasuntheram | 1 |
| N. Nallatamby | 1 |
| V. Sanmogam | 1 |
| M. Subramaniam | 1 |
| A. Ponayah | 1 |
| T. Conyah | 1 |
| A. Ramakrisnan | 1 |
| **Hatton.** | |
| C. Ponnampalam Conductor | 10 |

| பிரதியெண்ணிக்கை. | |
|---|---|
| V. Sinnappah | 3 |
| P. Ayathurapillai | 1 |
| P. Sinnasawmy | 1 |
| வே. இளையதம்பி | க |
| வே. காசிப்பிள்ளை | க |
| சி. ஆறுமுகம் | உ |
| **Deckoya** | |
| C. Canagasaby Overseer | 2 |
| C. Elayatamby | 2 |
| **Tallawakelly** | |
| M. S. Walluppillai Storekeeper | 1 |
| N. Tamba | 2 |
| **Nannoya** | |
| S. Nagamuttu Overseer | 1 |
| **Neweraleiya** | |
| A. Tilliampalam Head Overseer | 1 |
| Sinnaver | 1 |
| சி. சிவ. அ. சரவணமுத்து | ரூ |
| க. வேலுப்பிள்ளை | ரூ |
| நா. சிற்றம்பலம் | க |
| **Kandy.** | |
| W. Annamalay Chettiar | 2 |
| கோ. கனகசபை | க |
| **Gampola** | |
| K. M. Valuppillai | 5 |
| **மாத்தளை** | |
| கா. பஞ்சாட்சரஐயர் | க |
| வி. வெற்றிவேலுப்பிள்ளை | க |

# கையொப்பக்காரரின் பெயர்கள்.

---

## காரைநகர்.

| | பிரதியின்றொகை. | | பிரதியின்றொகை. |
|---|---|---|---|
| கா. வேதக்குட்டிஐயர் | க | வயித்திலிங்கம் | [illegible] |
| சி. இராமலிங்கையர் | க | சி. சரவணமுத்து | க |
| ச. அருணாசலபிள்ளை தமிழ்ச் சிரேட்டாசிரியர் | ரு | ப. சின்னத்தம்பி | க |
| | | க. இலட்சுமணபிள்ளை | க |
| சி. சின்னப்பு (தமிழ்வைத்தியர்) | க | கா. சிதம்பரபிள்ளை | [illegible] |
| இ. சபாபதி | க | மு. தில்லையம்பல[illegible] | [illegible] |
| க. சுப்பிரமணியன் | க | சி. கந்த[illegible]ள்ளை | க |
| த. நாகமுத்து | க | கோ. வேலாயுதன் | [illegible] |
| இ. வியாக்கிரபாதர் | க | அ. சுப்பிரமணியர் | க |
| த. சுப்பிரமணியபிள்ளை | க | கு. பொன்னையா | க |
| வே. காசிநாதர் | க | க. தில்லையம்பலம் | க |
| ஆ. கந்தப்பு | க | வே. அம்பல[illegible]ன் | [illegible] |

---